# முற்றிலும் சிறந்த விவால்டி ரெடிமேடுகள்




சட்டைத்துணி நிபுணர்கள் உடனடி அணியும் ஷர்ட்ஸ் செய்ய நிச்சயித்ததின் முழுமையான பயனை உங்கள் கண்முன்னால் காண்கிறீர்கள். பாம்பே டையிங் வழங்கும் விவால்டி ஷர்ட்ஸ். அருமையான பருத்தி, பாலியெஸ்டர்-பருத்தி நெசவுகளிலிருந்து சட்டையின் ஒவ்வொரு அம்சங்களையும் அதன் கடைசி பட்டன்வரை தரத்தின் உன்னதத்தை உணர்ந்து செயலாக்குகிறோம். ஏனெனில் எங்களுக்குத் தெரியும் நிபுணர்களான நீங்கள் எதை விரும்புவீர்கள் என்று.

---------விவால்டி. தரமான இழைகள் இணைந்து ஒருங்கமைந்தது--------

தெரிந்தெடுக்கப்பட்ட ஷோ ரூம்களில்தான் கிடைக்கிறது.

# மேதைகள் வியந்த மேதை!

படத்தை உற்றுப் பாருங்கள்.

ரொம்ப சுவாரஸ்யமாக ஒருவர் பொடி போடுவது தெரிகிறது.

பழங்காலத்து ஆசாமி, புரிகிறது.

இன்னும் சற்றுக் கவனமாகப் பார்த்தால் அவர் அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் தான் என்பது அந்நாளைய மனிதர்களுக்கு விளங்கும்!

இசை மேதை ராமானுஜ அய்யங்காரை நேர்க் கோணத்தில் படம் எடுத்தவர் உண்டு; பாடும் போது படம் எடுத்தவரும் உண்டு. பேசும் போதும், நண்பர்களுடன் சேர்ந்திருக்கும் போதும் போட்டோ பிடித்தவர்கள் இருக்கிறார்கள்.

ஆனால் பொடி போடும் போது படம் பிடிக்கும் துணிவு ஒருவருக்குத்தான் இருந்தது!

அவர், ஆர். என். நாகராஜராவ்.

ஒரு கார்ட்டூன் சித்திரம் கூட இத்தனை சிறப்பாக அமையுமா, சந்தேகம்தான்!

எனவேதான் அந்நாளைய கார்ட்டூன் மேதை மாலி, நாகராஜராவைத் தலை மீது தூக்கி வைத்துக் கொண்டாடினார். அது மட்டுமல்ல, ''எனக்கு போட்டோ பிடிக்கக் கற்றுக் கொடுங்கள்'' என்று கார்ட்டூன் மேதை, போட்டோ மேதையிடம் சிஷ்யராக அமர்ந்தார்!

இப்படி படம் பிடித்தால் அய்யங்காருக்



குக் கோபம் வராதோ? வரவில்லை! மாறாக ரசித்தார். ''காமிராவைக் கையாள்வதற்கென்றே கடவுள் நாகராஜராவைப் படைத்திருக்கிறார்'' என்று அவரைப் பாராட்டி, பிறவி மேதையாக்கினார்!

**ப**த்திரிகைகளுக்குப் புகைப்படங்கள் எடுப்பவராகத்தான் கலை வாழ்க்கையை ஆரம்பித்தார் நாகராஜராவ். சீக்கிரமே சினிமா துறை அவர் திறமையை உணர்ந்து தன் பக்கம் இழுத்துக் கொண்டது. ஏராள ஆண்டுகளுக்கு அத் துறையில் கொடி கட்டிப் பறந்தார். ஆனாலும் அவ்வப்போது பத்திரிகைகளுக்குப் படம் எடுத்து வந்தார். குறிப்பாகக் கல்கி.

அமெரிக்காவிலிருந்து வந்து இங்கு தமிழ்ப் படங்களை இயக்கியவர் எல்லிஸ் ஆர். டங்கன். பக்த மீரா, மந்திரி குமாரி போன்ற படங்கள் அக் காலத்தில் அவர் ஆற்றலில் உருவாகி, டைரக்ஷனிலும் ஒளிப்பதிவிலும் திருப்பு முனைகளாக அமைந்தன. ''இந்தியாவின் மகத்தான புகைப்பட நிபுணர்களில் ஒருவர்'' என்று நாகராஜராவை டங்கன் வர்ணித்தார்.

எம். ஜி. ஆர். முதலமைச்சர் ஆனதும் கோட்டையில் தமது காரியாலய அறையில் வைத்துத் தம்மைப் படமெடுக்க முதலில் நாகராஜராவைத்தான் அழைத்தார். அவர் திறமையில் மட்டுமின்றிக் கை ராசியிலும் அத்தனை நம்பிக்கை!

இன்று எண்பது வயதான நாகராஜராவிடம், ''ஒரு புகைப்படக்காரருக்கு அவசியத் தேவை என்ன?'' என்று கேட்டால், ''**anticipation**'' என்று பதிலளிக்கிறார்.

அதாவது, அடுத்தது இன்ன நடக்கப் போகிறது என்று ஊகித்து, எதிர்பார்த்து, காமிராக் கண்ணால் அதைக் காணத் தயாராகி நிற்கும் நிலை.

— நீலம்



# அப்புறம் என்ன ஆச்சு?

**ப**ம்பாய் ஷண்முகானந்தா கலையரங்கம் கடந்த ஃபிப்ரவரியில் ஒரு பயங்கரத் தீவிபத்தால் பாதிக்கப்பட்டது அல்லவா...? இப்போது அந்த அரங்கத்தைச் செப்பனிடும் பணிகள் மும்முரமாக நடைபெற்று வருகின்றன.

நியூ யார்க்கில் உள்ள 'கென்னடி ஹால்' என்ற அரங்கின் மோஸ்தரில் ஷண்முகானந்தா அரங்கைச் சீர் செய்யப் போகிறார்கள். மிகச் சிறப்பான ஒலிபெருக்கி வசதிகளைச் செய்வதுடன், நவீன, நகரும்மேடை, விளக்குகள், குளிர்சாதன வசதி... என்று எல்லாமே 'லேட்டஸ்ட்' தொழில் நுட்பத்தில் அமையப் போகின்றனவாம்.

ஷண்முகானந்தா அரங்கில் நடந்த விபத்து, சமீப காலமாக நம் நாட்டில் நிகழ்ந்து வரும் இத்தகைய விபத்துக்களுள் முதலாவது. விபத்துக்களுக்கு முற்றுப்புள்ளி விழ வேண்டும் என்று பிரார்த்திப்பதோடு, இந்த பம்பாய்க் கலையரங்கத்தில் நடக்க இருப்பது போன்ற சுறுசுறுப்பான சீரமைப்புப் பணிகளும் இன்னும் அதிகப்படியாக விபத்துக் காப்பு நடவடிக்கைகளும், பாதிக்கப்பட்ட இதர கட்டடங்களிலும் நடக்கும் என்று எதிர்பார்க்கலாமா...?



இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையே ஓரிரு நிமிடங்கள் வெறுமையாகி விடும்போது பொன்மொழிகளும் அறிவுரைகளும் எழுதப்பட்டுள்ள 'இடைவெளி நிரப்பு அட்டை'களை டி.வி.யில் காண்பிக்கிறார்கள். இப்படிக் காண்பிக்கப்படுகிறவை பயனுள்ள கருத்துக்களாக — நடைமுறை வாழ்க்கைக்கு உபயோகமுள்ளவையாகவே இருக்கின்றன. ஆனால் — அழகிய முகத்தில் காணப்படும் அம்மைத் தழும்புகளாகச் சந்திப்பிழைகள் மலிந்திருப்பதுதான் துயரமான அம்சம். உதாரணத்துக்கு:

"போக்குவரத்து விதிகளை கடைபிடியுங்கள்."

பல நாட்கள் தொடர்ந்து கவனித்த பின்னரே இதைக் குறிப்பிட வேண்டியுள்ளது. அத்தனை பேர் பணியாற்றும் தொலைக்காட்சி நிலையத்தில் இதைக் கவனித்து எடுத்துச் சொல்லித் திருத்துவதற்கு ஆளே இல்லையா?

இப்படிக் காண்பிக்கப்படும் அட்டைகளில் இன்னொன்று தாகூரின் வரிகளைக் கொண்டது:

"இன்பம் பனித்துளி போன்றது. சிரிக்கும் போதே அது உலர்ந்து விடுகிறது."

'இதனைத் தொடர்ந்து ஒளிபரப்பான பாலமுரளி கிருஷ்ணாவின் இசை நிகழ்ச்சியின் முடிவில் இவ்வரிகளில் பொதிந்துள்ள உண்மையை அனுபவபூர்வமாக உணர முடிந்தது' என்பதாக எதிரொலிக்கு ரசிகர் ஒருவர் கடிதம் எழுதியிருந்தார்.

உண்மை. பாலமுரளி கிருஷ்ணாவின் அன்றைய நிகழ்ச்சி அட்டகாசம். அதுவும் குறிப்பாக, மோகனாங்கி ராகத்தை மிகமிக நிதானமாக அனுபவித்து ஆலாபனை செய்து, விளம்ப காலத்தில் சுருதியுடன் குழைந்து இழைந்து பாடியது மோகனமான மயக்கத்தை ஏற்படுத்தியது. அடுத்து வந்த முகாரியில் ஒரே வாண வேடிக்கை. பாடல் முடிந்த சில நொடிகளுக்குப் பின்னரும் அந்தக் கிறக்கம் நீடித்தது. ஆனால் — அத்துடன் அந்த நிகழ்ச்சி முடிந்துவிட்டது என்பது தெரிந்தபோது, பெங்களூருக்கு வந்த ஏர்பஸ் விமானத்தில் பயணம் செய்துவிட்ட உணர்வு!

## அது என்ன அரைமணி நேரம்?

பெரும்பாலான நிகழ்ச்சிகளுக்கு ஒரே மாதிரியான கால வரையறை ஏன்? அது என்ன, அரைமணி நேரம் என்று ஒரு கணக்கு? புரியவில்லை.

மத்திய அரசின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கிய துறை என்பதால் இருக்கக் கூடிய சில தளைகள்தான் காரணம் என்பது பதிலானால், அளிக்கப்படப் போவதாகக் கூறிக்கொண்டிருக்கும் தன்னாட்சி அமலாகும் போது இந்த நிலையில் ரசனை உணர்வுடன் கூடிய மாற்றங்கள் ஏற்படுமா? அல்லது, இதே 'அரசு அலுவலரின் அணுகுமுறை'யே நீடிக்குமா?

பெரிதும் உதவிகரமான ஒரு பகுதி 'வேலை வாய்ப்புச் செய்திகள்' என்றாலும், நிலையத்தில் அதனைப் படிப்பவர்கள் அந்தப் பகுதியின் முக்கியத்துவத்தை உணர்ந்துள்ளதாகவே தெரியவில்லை. பள்ளிக் குழந்தைகள் வீட்டுப் பாடம் படிப்பதைப் போலவே இந்தச் செய்திகளை வாசிக்கிறார்கள்.

வேலையில்லாமல் தவிப்பவர்களுக்கு நம்பிக்கையும் உற்சாகமும் அளிப்பது போல் உணர்ச்சியுடன் படிக்கக் கூடாதா?

— கிச்சாமி



அடுத்த இதழில்......

● விளவங்கோடு தொகுதி எப்படியிருக்கிறது?
— நமது நேரடி விசிட்

மற்றும்

இலவச இணைப்பாக
பரமஹம்சர் சொன்ன அமுதக் கதைகள்.

## மத்யமர்

# 'தர்ட்டி ஃபார்ட்டி'

நஞ்சுண்டராவுக்கு உயிர் வாழ்வதின் அர்த்தம் கிடைத்துவிட்டது. பி.டி.ஏ அலுவலக சிவண்ணாவிடமிருந்து போன் வந்துவிட்டது. ஆபீசுக்கு அரை நாள் லீவு போட்டுவிட்டு உடனே புறப்பட்டார். மனைவியிடம் நேற்றைக்குத்தான் சொல்லிக்கொண்டிருந்தார். ''எனக்கு என்னவோ இந்த முறை கிடைத்துவிடும் போல இருக்கிறது கோதாவரி.''

''ஏதோ ராகவேந்திரர் கிருபை இருந்தால் கிடைக்கும்'' என்றாள் அவள்.

பெங்களூரில் பெரும்பாலான குடும்பத் தலைவர்களின் கனவுகளில் முதல் ஸ்தானம் வகிப்பது 'பிடிஏ ஸைட்' என்று சொல்லப்படும் வீட்டுமனை கிட்டுவதுதான். நகரத்தை மைசூர்பாகு போல் கூறுபோட்டு, வீட்டு வசதி வாரியம் ஆயிரக்கணக்கான மனைகளை ஒதுக்கீடு செய்தாலும், நகர மக்களின் மனையாசையைத் திருப்தி செய்ய இயலவில்லை. ஆர்ட்டி நகர், ஜேப்பி நகர், பசவேசுவர நகரா, விஜய நகரா, பணசங்கரி, மடிவாளா, கோரமங்களா, கோடிஹள்ளி என்று பெயர் வைத்து மாளவில்லை. நகர மையத்திலிருந்து இருபத்தைந்து கிலோமீட்டர் வரை பரந்து விரிந்திருப்பினும் இன்னும் இன்னும் என்று நகர மக்கள் மனைப்பசி தீராமல் கேட்டுக்கொண்டே இருந்தார்கள்.

ஒரு தர்ட்டி ஃபார்ட்டி சைட்டு, அதில் ஒரு தென்னை மரம், ஒரு வீடு, நெருப்புப் பெட்டி போல ஒரு ஹால், கிச்சன், பெட்ரூம், பூஜா ரூம்... இதுபோதும். பெங்களூர் வாசியின் ஆத்மசாந்திக்கு.

நஞ்சுண்டராவ் இதுவரை ஆறு முறை மனு செய்தும் மனை கிட்டாதவர். இந்த முறை அழைப்பு வந்தது, தேவகட்டளைப் போல இனித்தது.

பிடிஏ அலுவலகத்தில் சிவண்ணாவின் மேசையைத் தேடிக் கண்டுபிடிப்பதற்குள் இரண்டு மணியாகிவிட்டது.

''வாரும் ராயரே, உங்களைப் பற்றி நம்ம ரங்கநாத்தான் போன் பண்ணியிருந்தார்.''

''அவுது அவுது'' என்று தலையாட்டி, ஆர்வத்துடன் காத்திருந்தார் நஞ்சுண்டராவ்.

''உங்க அப்ளிகேஷன் நம்பர் என்ன?''

ராவ் பிடிஏ அனுப்பியிருந்த அஞ்சல் அட்டையைக் காட்டினார். அதை அவர் ஒருமுறை பார்த்துவிட்டு, ''இது இப்ப அலாட் ஆறதில்லை'' என்றார்.

''பின்னே எதற்கு அழைத்தீர்கள்?'' என்றார் நஞ்சுண்டராவ் ஏமாற்றத்துடன்.

''ஒரு கார்னர் சைட் பிஎஸ்கே தர்ட் ஸ்டேஜில் இருக்கு, வேணுமா?''

''எத்தனை?''

''என்ன, ஒரு அறுபதாயிரம்தான். தர்ட்டி ஃபார்ட்டி.''

''அறுபதாயிரமா?''

''அந்த ஏரியாவில் சைட்டு என்ன விலை தெரியுமா? ரெண்டு லட்சம்! நல்ல ஷகரான இடம். முதல்ல சைட்டைப் பாருங்க!''

''அலாட்மெண்ட் எம்பேர்ல வருமா?''

''அதெல்லாம் பார்த்துக்கலாம். ஆக்ஷன் ஸைட்னு இப்ப மாற்றாவிட்டாலும் டாகுமெண்ட்ஸ் எல்லாம் உங்ககிட்ட கொடுத்துப் போஸ்ட் டேட் பண்ணி ட்ரான்ஸ்பர் டாகுமெண்ட்ஸ்ல கையெழுத்துப் போட்டு...'' அவர் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் பார்த்துச் சொன்னார்: ''பார்ட்டி பம்பாய்ல செட்டில் ஆய்டறாங்க. கல்யாண அவசரமா விக்கறாங்க. இல்லைன்னா அறுபதாயிரத்துக்கு ஒப்புத்துக்க மாட்டார். முதல்ல சைட்டைப் பாருங்க. கிருஷ்ணப்பா! இவரோட போய்க் காட்டுப்பா. பிடிச்சிருந்தாக் காதும் காதும் வைத்தாப்பல காரியத்தை முடிக்கலாம்.''

''பக்காதானே?''

''ஸ்வாமி! நான் பிடிஏ ஆள். ரங்கநாத் சொன்னாரே என்று உங்களுக்கு உதவி பண்ணப் போகிறேன். இப்ப நீங்க இல்லைன்னா எட்டுப் பேர் காத்திருக்காங்க. முழுத் தொகையோட...''

நஞ்சுண்டராவ், ''இதோ இப்பவே போறேன்'' என்றார்.

'''ஸைட்'டைப் பார்த்துப் பிடிச்சிருந்தால் ரெண்டு நாளில் பணம் கொடுக்க வேண்டி வரும்... டாக்குமெண்ட்ஸை வாங்கிண்டு பணம் கொடுத்தால் போதும்.''

''கிருஷ்ணப்பா, சர்வே, பிடிஏ நம்பர் எல்லாம் சரியாப் பார்த்து வெச்சுடு. அண்ணாவைக் கொண்டு காட்டு'' என்றார்.

''செலக்ட் ஆனால் கிருஷ்ணப்பாவுக்குத் திண்டி காப்பிக்கு ஏதாவது கொடுங்கள், சந்தோஷப்படுவான்.''

அனுமந்தநகர், பணசங்கரி முதல் ஸ்டேஜ் தாண்டி ஒரு கோடியில் இருந்தது அந்தப் பிரதேசம். இங்கொன்றும் அங்கொன்றும் வீடுகள் முளைத்திருந்தன. அதில் சர்வே நம்பர், ஸைட் நம்பர் எல்லாம் குழப்பமாகத்தான் இருந்தன.

''பொட்டலாக இருக்கும் போல''

சுஜாதா

என்றாள் மனைவி.

''எல்லாக் காலனியும் ஆரம்பத்திலே அப்படித்தான் இருக்கும். ஒரு பர்லாங் நடந்தால் மெயின் ரோடு, கடைகண்ணி, பள்ளி, போஸ்ட் ஆபீஸ் எல்லாம் இருக்கிறது.'' என்றார் கிருஷ்ணப்பா.

''ஒரு வருஷத்தில் இந்த ஏரியாவில் ஒரு தியேட்டர், ஒரு ஜூனியர் காலேஜ் வருகிறது. பஸ் ரூட் நாற்பத்துமூணு பத்து நிமிஷத்துக்கு ஒரு பஸ் போகிறது. பக்கத்துக் கிராமத்திலிருந்து ஏராளமாகப் பாலும் காய்கறிகளும் கிடைக்கும்.''

''அப்படியா?''

''அறுபதாயிரத்துக்கு தர்ட்டி ஃபார்ட்டி ரொம்ப மலிவு! கார்னர் ஸைட்டு. அயனான ஸைட். அடுத்தது எண்பதடி ரோடு. பாருங்கள், இப்போதே விளக்குப் போட்டு விட்டார்கள். சரியாகப்பார்த்துக்கொள்ளுங்கள், இதுதான் ஸைட்டு.''

சொன்னது போல நல்ல மனைதான் அது. சமனமாக நிலம்-வெள்ளைக் கற்கள் வைத்து... நஞ்சுண்டராவின் கனவுகளுக்கு ஏற்ப...

நஞ்சுண்டராவ் அப்போதே, 'இங்கே கிச்சன், இங்கே பெட்ரூம், இங்கே பூஜை ரூம்' என்று மனசுக்குள் கட்டத் துவங்கி விட்டார்.

**வீ**ட்டுக்குத் திரும்பிய போது, ''இந்த மாதிரி சான்ஸ் கிடைக்காது. விசாரித்





''ஏற்கனவே செய்த தவறுகளை மீண்டும் செய்ய மாட்டோம் என்று மக்களுக்கு வாக்குக் கொடுத்து நாம் ஆட்சிக்கு வந்திருப்பதால், அந்தத் தவறு களை மீண்டும் செய்யாமல், புதிய தவறு களைச் செய்யுமாறு கட்சிக் கண் மணி களைக் கேட்டுக் கொள்கிறேன்!''

— ஞா. ஞானமுத்து.

துப் பார்த்துவிட்டேன். அங்கே தர்ட்டி ஃபார்ட்டி ஒண்ணரை லட்சத்துக்குக் குறையாதாம்.''

''நமக்கு மட்டும் எதற்கு அறுபதாயி ரத்துக்குக் கொடுக்கிறார்களாம்?'' என்றாள் மனைவி.

''ரங்கநாத் மூலமாகப் போனதால் தான்.''

''எனக்கு என்னவோ அப்படித் தோன்ற வில்லை. நீங்கள் எதற்கும் வக்கீல் மாமாவிடம் ஒரு வார்த்தை கேட்டு விடுங்கள். வில்லங்கம் ஏதாவது இருக்கப் போகிறது.''

ராத்திரி வக்கீலைப்பார்த்தபோது,''டாக்கு மெண்ட்ஸ் வாங்கிக் கொண்டு ஒரு ப்ராமி ஸரி நோட்டு, அறுபதாயிரத்துக்குப் பக்கா ரசீது, போஸ்ட் டேட் பண்ணிய ட்ரான்ஸ் பர் டாக்குமெண்ட்ஸ், அதுகூட வேண்டாம்; பத்திரம் நம் கையில் வந்தால் போதும்'' என்றார். ''பெங்களூரில் இது சகஜம். நானே கூட இப்படித்தான் சைட் வாங்கினேன்'' என்றார் வக்கீல் சோமப்பா.

''ஆனால் அறுபதாயிரத்துக்கு முப்பது நாற்பதா அதுவும் பணசங்கரியில்! நம்ப முடியவில்லை!'' என்றார். எதற்கும், பணம் கொடுத்தவுடன் நாலு பாறைக் கம்பம் நட்டு, முள்வேலி போட்டுவிடு! இல்லாவிடில்... குடிசை கிடிசை போட்டிருந்ததா மனையில்...?''

''அதெல்லாம் இல்லை!''

''அறுபதாயிரமா? ரொம்ப சீப்!''

மறுநாள் ப்ராவிடண்ட் பண்டில் லோன் எடுத்தார். யூனிட் பத்திரங்களின் மேல் லோன் போட்டார். தம் மனைவியின் நகைகளின் மேல் சிக்பேட்டையில் கடன் வாங்கினார். பெண் சாவித்திரியின் கல்யாணத்துக்குச் சேர்த்து வைத்திருந்த எஃப்டியின் பேரில் நாற்பதாயிரம் எடுத்து நிரப்பி அறுபத்து ஐயாயிரம் சேகரித்து விட்டார். சிவண்ணாவின் வீட்டுக்கு எடுத்துச் சென்றார்.

சிவண்ணா, கொடுத்த பணத் துக்குப் பவர் ஆஃப் அட்டார்னி சார்பாக ரசீது கொடுத்துவிட்டு, பம்பாய்க்காரனின் அலாட்மெண்ட் காகிதங்களையும் கையோடு கொடுத்து விட்டார். நஞ்சுண்டராவ் வக்கீல் சோமப்பாவை உடன் அழைத்து வந்தி ருந்ததால், அவர் காகிதங்களைப் பார்த்து ''ஆல் இன் ஆர்டர்'' என்று சொல்லி விட,

சிவண்ணா, ''இதுவரை முப்பது பேருக்கு ஸைட் வாங்கிக் கொடுத்திருக்கிறேன். அதை ஒரு பொதுநலச் சேவையாகவே செய் கிறேன்'' என்று காப்பி டிபன் கொடுத்தார். வக்கீல், ''நஞ்சுண்டா! நீ ரொம்ப லக்கி! அனுமாருக்கு அர்ச்சனை பண்ணி விடு'' என்றார்.

ஒரு வாரத்துக்குள் சைட்டில் வேலி போடச் சென்ற போது, அதே இடத் தில் வேறு ஒருவர் வேலி போட்டுக் கொண்டிருந்தார். நஞ்சுண்டராவ் திடுக்கிட்டு அருகில் சென்று விசாரிக்க, ஓனர் எதிர் பஸ் ஸ்டாண்டிலிருந்து வருவதற்காகக் காத் திருந்ததில் அவருக்குக் காட்டப்பட்ட மனை அது அல்ல என்றார். சர்வே நம்பர் பார்த்து, ''இது அடுத்த மனை'' என் றார்.

அடுத்த மனையைப் பார்த்தால் அதன் நட்ட நடுவில் பெரிய பாறையிருந்தது. பார்த்தால் சைட் போலவே தோன்றவில்லை. ஒரு சின்ன குன்று போல இருந்தது.

''சிவண்ணான்னு பிடி ஏ ல ஒருத்தர் இந்த மனை, கார்னர் ஸைட்டைக் காட்டினாரே?''

''இந்த ஸைட்டையா? கார்னர் ஸைட் டையா? சுவாமி, ஏமாந்து போயிருக் கீங்க. இந்த மனை அஞ்சு வருஷமா எம் பேரில் 'பக்கா'வா அலாட் ஆனது. நேத்துத் தான் யாரோ தப்பா இதைப் பார்த்துக்கிட்டு இருந்தாங்கன்னு சொன்னதும், வேலி போட வந்தேன். சரியாப் பாருங்க. உங்க சர்வே நம்பர் இந்தக் கல் குன்று. ஒரு நிமிஷம்! உங்களுக்கு விற்றது பம்பாய் பார்ட்டியா?''

''ஆமாம்.''

''புரியறது! எத்தனை கொடுத் தீங்க?''

''அறுபதாயிரம்.''

''அய்யோ! அய்யா என்கிட்ட இதே ஸைட்டு வந்தது. முப்பதுக்கு மேலே கிடையாதுன்னுட்டேன். சுவாமி! இந்தக் கல் லைப் பேர்க்கவே நாற்பதாயிரம் செலவா குமே! எப்படி ஏமாந்தீர்?''

நஞ்சுண்டராவ் சரியாகப் புரியாமல் மறுபடி சிவண்ணாவிடம் மறுதினம் சென்ற போது, சிவண்ணா வீட்டில் இல்லை. பம்பாய் போயிருப்பதாகத் தெரிந்தது. ஒரு வாரம் ஆகும் என்றார்கள். பிடி ஏ போன போது, கிருஷ்ணப்பா தென்பட், அவரை விசாரித்ததில், ''அப்படியா? சர்வே

நம்பர் தப்பா?'' என்றார்.

''அப்படித்தான் போலிருக்கிறது. நீங்கள் காட்டிய சைட்டு வேற நம்பர். ஒனரே சொன்னார்.''

''நான் விசாரிக்கிறேன். கவலைப்படாதிங்க. ஸைட்டு இருக்கில்ல?''

''ஸைட் இருக்கு: ஆனா அதில வீடு கட்ட முடியாது!''

''ஏன்?''

''வெறும் பாறை!''

''அதுக்கென்ன லேசா உடைச்சுட்டா போறது...''

''அது வேற பேச்சு. நீங்க காட்டின ஸைட்டு தப்பு! அதைப் பார்த்துத்தான் பணம் கொடுத்தேன்.''

''அப்ப அது வேண்டாமா உங்களுக்கு?''

''என் பணம் வேண்டும்.''

''பணம் எங்கேயும் போகாது. சிவண்ணா வந்ததும் சொல்கிறேன்.''

**தி**னம் போன் பண்ணியதில், சிவண்ணா ஊரிலிருந்து வரவில்லையென்றே சொன்னார்கள். வக்கீலிடம் போய்க் கேட்ட போது லீகலாக ஏதும் செய்ய முடியாது. பக்கத்து ஸைட்டாக இருந்தால் என்ன, தர்ட்டி ஃபார்ட்டி சீப் தானே...'' என்று அபிப்பிராயம் சொன்னார்.

''பக்கத்து ஸைட்டில் ஒரு பெரிய பாறை குன்று போல இருக்கு வக்கீல் சார்!''

''அப்படியா? ஏமாத்திட்டானா? அடப்பாவி!''

''சிவண்ணாவைக் கேட்டீங்களா?''

''அவன் ஊரிலேயே இல்லை. தினம் போன் பண்ணுகிறேன்!''

''போன் பண்ணாதீர்! அறிவிப்பில்லாமல் நேரே போய்ப் பாரும்.''

அப்படிப் பார்த்ததில் சிவண்ணா சிக்கிக் கொண்டார்.

''வாங்க, ராவ்! கட்ட ஆரம்பித்தீர்களா, வீடு?'' என்றார்.

''இல்லை சிவண்ணா. ஸைட் நம்பர் தப்பாகக் காண்பித்துப் பக்கத்து மனையைப் பார்த்துப் பணம் கொடுத்து விட்டேன்! இப்போது சரி பார்த்தால் எல்லாமே பாறை!''

''பாறையா?''

''ஆமாம்!''

சிவண்ணா கடும் கோபம் கொண்டு, ''ஏய், கிருஷ்ணப்பா! சாருக்கு எந்த ஸைட்டைக் காண்பித்தாய்?'' என்றார்.

''கார்னர் ஸைட். அதான் கார்னர் ஸைட்டு.''

''உங்க ஸைட் நம்பரைச் சொல்லுங்கோ...'' சிவண்ணா கோடு கோடாக ப்ளூ ப்ரிண்ட் வரைபடத்தில் பார்த்து, ''ஆமாம், கார்னர் ஸைட் இல்லை. அதுக்குப் பக்கத்துது'' என்றார்.

## மத்யமர் : வாசகர் விமர்சன

**ம**த்யமர் வரிசையில் மூன்றாவது கதை 'தர்ட்டி ஃபார்ட்டி.' மத்தியதர வகுப்பினரின் ஆசாபாசங்கள், கனவுகள், வைராக்கியம், பலவீனம் என்று பல கோணங்களை இந்தத் தொடர் சிறு கதைகள் சித்திரிக்கும்.

இக்கதைகளைக் கவனமாகப் படித்து சுஜாதா தேர்ந்தெடுத்துள்ள கதைக் கரு, அவர் கதை சொல்லக் கையாண்டுள்ள யுக்தி, நடை, பாத்திரப் படைப்பு என்று ஏதேனும் ஓர் அம்சத்தை மட்டுமே தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். அந்த அம்சத்தை விமர்சித்துத் தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள். கதையில் ஏதேனும் குறை இருப்பதாகப் பட்டால் அதையும்

''முழுக்க முழுக்கப் பாறை...''

''இருக்காதே! பாறையா இருந்தால் பிடிஏ அலாட் பண்ண மாட்டாங்களே. நீங்க எதுக்கும் திங்கட்கிழமை வாங்க. நான் இன்னைக்குச் சாயங்காலம் போய்ப் பார்த்துட்டு வர்றேன்.''

''இல்லை சிவண்ணா, என் பணத்தைத் திரும்பக் கொடுத்துடுங்க. என் லைஃப் சேவிங் எல்லாத்தையும் தீர்த்துட்டேன். எனக்கு மேலே சங்கடம் இருக்கிறது. ஏற்கெனவே பல ரெவின்யூ ஸைட்டுகளில் ஏமாந்திருக்கேன். பணத்தைக் குடுத்துடுங்க...'' என்று நஞ்சுண்டராவ் கெஞ்ச...

''அதுக்கென்ன, பம்பாய் பார்ட்டிக்கு ட்ரங்கால் பேசிடறேன். பத்து நாள்ல ட்ராப்ட் அனுப்பிச்சுர்றாங்க. நீங்க போங்க. பத்திரத்தைக் கொண்டு வாங்க.''

**ப**த்து நாட்கள் ஆயின. சிவண்ணாவை மேசையிலேயே காணோம். செக்ஷன் மாற்றியிருப்பதாகச் சொன்னார்கள். அங்கே போனால் அது விதான் சௌதாவில் இருந்தது. பிடிஏ சேர் மனைப் பார்க்கச் சீட்டு அனுப்பிப் பார்த்தார் நஞ்சுண்டராவ். அப்பாயின்ட்மெண்ட் கிடைக்கவில்லை.

தாம் முழுவதுமாக ஏமாற்றப்பட்டு விட்டோம் என்பது உரைக்க அவருக்கு மேலும் ஒரு வாரமாயிற்று.

வக்கீல் சோமப்பாவும் மனைவியும் அவரை மாற்றி மாற்றிக் கேட்டார்கள்:

''சரியாப் பார்க்காம இந்தப் பாறையை வாங்குவீர்களா? எப்போதும் இவர் இப்படித்தான். எத்தனை இந்த மாதிரி ஏமாந்து போயிருக்கிறோம், கணக்கில்லை. ரெவின்யூ சைட்லயே எத்தனை பணம் விட்டாச்சு!''

''நஞ்சுண்டா! அவன் மேல லீகலா



சுட்டிக்காட்டி விமர்சிக்கலாம்.

பிரசுரமாகும் விமர்சனங்களுக்கு ரூ. 25/- சன்மானம். சிறந்த விமர்சனம் ரூ. 50/- சிறப்புப் பரிசு பெறும். தபால் கார்டில் மட்டுமே எழுதலாம்.

'தர்ட்டி ஃபார்ட்டி' கதைக்கான விமர்சனம்வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 8.5.90.

மத்யமர் வரிசையில் இரண்டாவதான 'புது மோதிரம்' கதையின் விமர்சனங்கள் அடுத்த இதழில் இடம்பெறும். சுஜாதாவின் அடுத்த சிறுகதை 20.5.90 இதழில் இடம்பெறும்.

கைவைக்க முடியாது. வாங்கிண்ட பணத்துக்கு ரசீது கொடுத்திருக்கான். டாக்குமெண்ட் கொடுத்திருக்கான். சர்வே நம்பர் தப்பாக் காட்டினதுக்கு எந்த அத்தாட்சியும் இல்லை. ஹி இஸ் க்ளீன்.''

''அதிலே எதுவும் கட்டவே முடியாதா?'' என்றாள் கோதாவரி.

சோமப்பா சிரிப்பை அடக்கி, ''அனுமார் கோவில்தான் உச்சியிலே கட்டலாம். அத்தனையும் பாறை!'' என்றார்.

மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நஞ்சுண்டராவின் சுவாச மூக்கு துடித்துப் பெரிதாக மூச்சுவிடத் துவங்கினார். முகம் சிவந்து, கைநடுங்க, ''அந்தச் சிவண்ணாவை... சிவண்ணாவை...''

''ஒண்ணும் பண்ண முடியாது'' என்றார் வக்கீல்.

''முடியும். முடியும்'' என்று முகத்தைக் கோண வைத்துக் கொண்டு ஒரு மாதிரி பார்த்து, கோபத்தால் உதடுகள் துடிக்க, ''முடியும்'' என்றார் தீர்மானமாக.

கோதாவரி கவலையோடு, ''போனாப் போறது வாங்கோ. என்னவோ பகவான் சோதனை'' என்றாள்.

''அப்படியே ஒரு கடப்பாரையை எடுத்து அந்தச் சிவண்ணா வீட்டுக்குப் போய் அப்படியே அவன் மண்டையைப் பிளந்துரணும்...''

''எதுக்கும் நான் ஒரு பப்ளிக் க்ரீவன்ஸ் லிட்டிகேக்ஷன் மாதிரி போடலாமா பார்க்கிறேன். இல்லை ஒரு லெட்டர்ஸ் டு தி எடிட்டராவது எழுதுவோம்... பாறையா இருந்தாலும் ஸைட்டுன்னு ஒண்ணு இருக்கே!'' — சமாதானமாய்ச் சொன்னார் வக்கீல்.

**ரா**த்திரி ஏழு மணிக்கு வக்கீலுக்கு போன் வந்தது. ''மாமா, கோதாவரி பேசறேன். சீக்கிரம் வாங்கோ.''

''என்ன ஆச்சு?''

''சாயங்காலம் சொன்னாரே அதுபோல கடப்பாரையை எடுத்துண்டு சிவண்ணா வீட்டுக்குக் கிளம்பிப் போயிருக்கார். எனக்கு ரொம்பப் பதற்றமா இருக்கிறது. மத்தியானத்திலிருந்தே சரியில்லை. அவர் ஒரு வாரமாகவே தனக்குள்ளேயே பேசிண்டிருக்கார். எனக்கு என்னவோ விபரீதமா புத்தி போறது. சீக்கிரம் வாங்கோ.''

வக்கீல் காரை எடுத்துக் கொண்டு உடனே சென்றார்.

''சிவண்ணா வீடு எங்கே தெரியுமா அவருக்கு?'' என்றார் கோதாவரியிடம் —

''பணம் கொடுக்கும் போது போயிருக்கிறாரே...?''

''அட்ரஸ் தெரியுமா?''

''எனக்குத் தெரியாதே. அய்யோ, ராகவேந்திரா! இது என்ன சோதனை! பணம் போனால் போகிறது. உயிருக்கு ஆபத்தாக வல்லவா போய்விட்டது. ஏதாவது ஒண்ணு கிடக்க ஒண்ணு செய்து விட்டால்...? பெரிசாக கடப்பாரை வாங்கி வந்தார். எதுக்குன்னு கேக்கறதுக்குள்ள ஆட்டோவில் புறப்பட்டுப் போயிட்டார்.''

''போய் எத்தனை மணி இருக்கும்?''

''எட்டு மணியாச்சே! ஈஸ்வரா பரமேஸ்வரா...!''

சோமப்பா டைரக்டரியில் ஒரு பிடிஏ அதிகாரியைத் தேடி, அவரிடமிருந்து சிவண்ணாவின் விலாசம் கிடைக்குமா என்று கேட்பதற்குள், கோதாவரி பயத்தில் அழ ஆரம்பித்தாள்.

''வதம் பண்றாப்பலதான் கிளம்பினார்... அதோ வர்றாரே!''

நஞ்சுண்டராவ் கையில் கடப்பாரையுடன் கிழிந்த சட்டையுடன் ஆட்டோவில் வந்து இறங்க,

''நஞ்சுண்டா! என்ன இது, பைத்தியக்கார வேலையெல்லாம்...?''

''அய்யோ, ஏன் இப்படி மிரள மிரளப் பார்க்கிறீங்க? என்ன பண்ணீங்க?''

''நஞ்சுண்டா எங்கே போனே? சொல்லு! சிவண்ணாவைக் கோபத்தில என்ன செஞ்சே? சொல்லு...''

''அங்கதான் போயிருந்தேன்'' என்றார் நஞ்சுண்டராவ்.

''சிவண்ணா வீட்டுக்கா?''

''இல்லை என் மனைக்கு. என் சொந்த தர்ட்டி ஃபார்ட்டி ஸைட்டுக்கு.''

''எதுக்கு?''

''அந்தப் பாறையைக் கடப்பாரையால் தட்டிப் பார்த்தேன். கொஞ்சம் கொஞ்சமா உடைச்சுரலாம். நாளையிலிருந்து நீயும் வா, கோதாவரி — ஒத்தாசைக்கு. இரண்டு பேருமாச் சேர்ந்துண்டு உடைச்சுரலாம்!''


தொலைத் தொடர்பு புதிய அமைச்சர் ஜனேஷ்வர் மிஸ்ரா


ஸாம் பிட்ரோடா
என்ன மிஸ்டர், உன்னி கிருஷ்ணன் சௌக்கியமா? எப்படி இருக்கு புது டிபார்ட்மெண்ட் எல்லாம்?


உன்னிகிருஷ்ணன்


மான்
சீக்கியர்களின்
கை குலுக்க எப்பவும் ரெடி!


வி.பி.சிங்
இந்தக் கத்தி கபடா எல்லாம் உதவாது... அதை வெளியில விட்டுட்டு வாங்க!


மூப்பனார்
ஐயோ, சகிக்கலை!
ராஜீவ்
பஹுத் அச்சா!


வி.பி.சிங்
தி.மு.க. எம்.பி.க்கள்
அ.தி.மு.க. காங்கிரஸ் எம்.பி.க்கள்
காவிரி நீர்ப் பிரச்னை நடுவர் தீர்ப்புக்கு விட கோரிக்கை.



# கல்கி

1990 மே 6
மலர் : 48 இதழ் : 40
பிரமோதூத சித்திரை 23



## யார் அந்த எம். எல். ஏ.?

இரண்டு வாரங்களுக்கு முன்னர், ''நெகடிவ் சிந்தனை நாட்டைக் கெடுக்கும்'' என்ற தலைப்பில் ஒரு தலையங்கம் எழுதியிருந்தோம். அதிலே, 'நமது சட்டமன்ற உறுப்பினர்கள் ஏதேதோ குடுமிபிடி சண்டைகளில் ஈடுபடுகிறார்களேயன்றி, ஆக்கபூர்வமாகச் சிந்திப்பதில்லை: உருப்படியான யோசனைகளை வழங்குவதில்லை' என்று குறைப்பட்டுக் கொண்டிருந்தோம். இதற்கு நேர்மாறாக ஒரு எம். எல். ஏ. ஆக்கபூர்வமாகச் சிந்தித்து, சிறந்த யோசனைகளையும் வெளியிட்டால் அதனை வரவேற்க வேண்டியதும் நம் கடமையாகிறது. மேற்படி தலையங்கம் வெளியாகி சரியாக ஒரு வாரத்துக்குப் பிறகு, ஒரு எம்.எல்.ஏ., நகரசபை நிர்வாகங்களுக்கான பட்ஜெட் விவாதத்தில் பங்கேற்று, அருமையாகப் பேசியிருக்கிறார். குறிப்பாகச் சென்னை மாநகரின் அவல நிலைகளைப் படம்பிடித்துக் காட்டியதுடன், அவற்றை நிவர்த்திக்க என்ன வழிகள் உள்ளன என்பதையும் திறம்பட விவரித்திருக்கிறார்:

* செப்டம்பர் இறுதியில் மாநகராட்சி தேர்தல்கள் நடக்கும் என்று அரசு அறிவித்துள்ளது. அதற்கு முன்பாக சென்னையின் ஜனத் தொகை அதிகரித்திருப்பதைக் கருத்தில் கொண்டு இருநூறு பிரிவுகளாக நகரைப் பிரிக்க வேண்டும்.

* சென்னை மாநகராட்சிக்கு என்று 35 கோடி ஒதுக்கப்பட்டுள்ளபோதிலும், போக்குவரத்து நெருக்கடி, நில ஆக்கிரமிப்பு, நடைபாதைகள் இல்லாத குறை, தகர்ந்து விழும் கார்ப்பரேஷன் பள்ளிகள், கவனிக்கப்படாத பூங்காக்கள் என்று ஏராளப் பிரச்னைகள் பூதாகாரமாக வடிவெடுத்து நிற்கின்றன.

* 'நடைபாதை இல்லாத சாலையே இல்லை' என்பது மாநகராட்சியின் குறிக்கோளாக இருக்க வேண்டும். நடைபாதைகளில் உள்ள கடைகள், குடிசைகள் அகற்றப்பட வேண்டும். நடைபாதை இல்லாததாலோ அல்லது ஆக்கிரமிப்புக்கு உள்ளாகி இருப்பதாலோதான் மக்கள் சாலையில் நடக்க, விபத்துக்கள் ஏற்படுகின்றன.

* ஒவ்வொரு கார்ப்பரேஷன் பூங்காவிலும் ஒரு டீவி வைத்தால், அதைக் காண மக்கள் கூடுவார்கள். அதனால் பூங்கா கவனிப்பாரின்றி இராது. மேலும் மக்கள் நடமாட்டம் இல்லாத பூங்காக்கள் தவறான வழிகளில் பயன்படுத்தப்படுவதைத் தவிர்க்க முடியும்.

* கார்ப்பரேஷன் பள்ளிகளை உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வேறுபாடின்றி அனைவருமே வெறுக்கிறார்கள். அதற்குக் காரணம், இடிபாடடைந்த கட்டடங்கள். 99 சதவிதம் பள்ளிகளில் போதிய பெஞ்சு வசதிகள் கூட மாணவர்களுக்கு இல்லை. சுகாதார வசதிகள் போதுமானதாய் இல்லை. இவற்றைச் சீர்செய்வதுடன், ஓர் ஆசிரியரின் கீழ் இத்தனை மாணவர்கள்தான் படிக்கலாம் என்று ஓர் உச்சவரம்பு விதிக்கப்பட வேண்டும்.

* சென்னை நகரின் பெரிய தலைவலிகளுள் ஒன்று, தாறுமாறாகச் சாலைகளில் வளைய வரும் ஆடு மாடுகள், நாய்கள், பன்றிகள் முதலியன. மாடுகளால் ஏற்படும் தொல்லைகள் கொஞ்ச நஞ்சமல்ல. பாதாளச் சாக்கடையில் அடைப்பு ஏற்படுவதில் தொடங்கி, நோய் பரவுதல், விபத்துக்கள் நேர்வது வரை பல வகையானவை. பம்பாயில் உள்ளது போல் இங்கும் மாடுகளுக்குத் தடை விதித்து, நகருக்கு வெளியே மாட்டுப் பண்ணை தொடங்கி, அங்கே எல்லா மாடுகளையும் கொண்டு போய் விடலாம்.

* அயல்நாடுகளில் இடு காடுகள் நந்தவனங்களாக உள்ளன. இங்கே அவ்வாறு இல்லாவிட்டாலும் குறைந்தபட்சம் இறந்தவர்களுக்கு இறுதிக் கடன் செலுத்தச் செல்லும் மக்களுக்கு அங்குள்ள வெட்டியான்களின் பேராசையால் இரட்டைத் துன்பம் ஏற்படுவதையாவது தடுக்கலாம்.

* சினிமா போஸ்டர்களை சென்ஸார் செய்ய வேண்டும். போஸ்டர்கள், வாகனம் ஓட்டுவோரின் கவனத்தைத் திசை திருப்பி விபத்துக்களுக்கு வழிவகுக்கின்றன.

* மாநகராட்சி வேறு; குடிநீர் — வடிகால் வாரியம் வேறு; எம். எம். டி. ஏ. வேறு என்றாகி விட்டதால் பல சிக்கல்கள் மக்களுக்குத் தோன்றியுள்ளன. ஒன்றுடன் ஒன்று ஒத்துழைத்துக் காரியங்களைச் செய்ய பிரதமக் காரியதரிசி மட்டத்தில் ஓர் உயர் அதிகாரி நியமிக்கப்பட வேண்டும்.

சென்னைவாசிகளின் குறைகள் எல்லாவற்றையும் அந்த எம். எல். ஏ. பட்டியலிட்டு விடவில்லைதான். குறிப்பாக ஒலிபெருக்கி, ஹாரன் தொல்லைகள், குண்டும் குழியுமான சாலைகள் முதலியன. என்றாலும் 'நமது நலனில் அக்கறை கொண்ட ஒரு எம். எல். ஏ. இருக்கிறாரே' என்று சென்னைவாசி மகிழ்ந்து போகிறான்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



லதா: "பதினாறாயிரத்துக்கு எங்கே போவேன்?"

# திறமைக்கு அணை போடும் வறுமை

பெண்கள் இன்னும் அவ்வளவாகப் பிரகாசிக்காத விளையாட்டுகளுள் ஒன்று கால்பந்து. எனினும் மாநிலப் பெண்கள் கால்பந்து அணி ஒன்று உள்ளது. இந்த அணிக்கு ஆடும் வாய்ப்பு லதாவுக்குப் பதினைந்தாவது வயதிலேயே கிடைத்தது. சாரதா வித்யாலயா பள்ளியில் படித்து வந்த போதே நன்றாகக் கால்பந்து ஆடிய லதா, பிறகு தமிழ்நாட்டு அணியில் சேர்ந்து கேரளா, ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், பீஹார், மேற்கு வங்காளம் போன்ற மாநிலங்களுக்குச் சென்று பந்தயங்களில் ஆடி அனுபவமும் நல்ல பெயரும் சம்பாதித்து வந்தார்.

"நான் அவ்வப்போது பந்தயங்களில் விளையாடச் சென்று விட்டதால் என் படிப்பு கூட பாதிக்கப்பட்டது. பின்னர் தனிப்பட்ட முறையில் படித்து முடித்தேன்!" என்று கூறும் பத்தொன்பது வயது லதாவுக்கு இப்போது ஒரு பெரிய பிரச்னை கிளம்பியிருக்கிறது.

அவரே விவரித்தார்: "அடுத்த மாதம் டென்மார்க் நாட்டில் உலகப் பெண்கள் கால்பந்துப் போட்டி நடக்க இருக்கிறது. அதில் பங்கு பெறப் போகும் இந்திய அணியில் நானும் இடம்பெற்றிருப்பதாகத் தகவல் வந்திருக்கிறது. சந்தோஷமான தகவல்தான். ஆனால் என்னால் சந்தோஷப்பட முடியவில்லை. காரணம், இந்தத் தகவலைச் சொல்லும்போதே இந்தியப் பெண்கள் கால்பந்து கழகத்தினர் என்னைப் பதினாறாயிரம் ரூபாய் செலுத்தச் சொன்னதுதான்! பதின்மூன்றாயிரம் ரூபாய் போக்குவரத்துச் செலவுக்கும் மூவாயிரம் ரூபாய் சீருடை உபகரணங்கள் போன்றவற்றுக்கும் தேவைப்படும் என்று சொல்லியிருக்கிறார்கள். இது தவிர பல்வேறு சில்லறைச் செலவுகளுக்கென்று குறைந்தபட்சம் நாலாயிரம் ரூபாய் தேவைப்படும்!

"இவ்வளவு ரூபாய்க்கு நான் எங்கே போவேன்? எனக்குத் தந்தை கிடையாது. என் தாயோ ஆரம்பப் பள்ளி ஆசிரியை. எங்களுக்குப் பெரிய சொத்து ஒன்றும் கிடையாது. இந்த நிலையில் எங்களுக்கு யார் கடன் கொடுப்பார்கள்? ஜூன் மாதம் ஒன்றாம் தேதி இந்திய அணி வெளிநாட்டுக்குக் கிளம்ப வேண்டும். என்னால் இன்னமும் ஆயிரம் ரூபாய் கூடப் புரட்ட முடியவில்லை. என்ன செய்யப் போகிறேன் என்றே தெரியவில்லை...!" — இதைச் சொல்லும் போது லதாவின் கண்கள் கலங்கி விட்டன.

தேசிய கால்பந்து அணியில் பங்கு பெற்றிருக்கும் முதல் தமிழகத்துப் பெண் லதாதானாம். தன் நிலைமையை விளக்கிப் பெரிய கம்பெனிகளின் அதிபர்கள், தமிழ்நாடு இளைஞர் மற்றும் விளையாட்டுத் துறை டைரக்டர், வங்கி உயர் அதிகாரிகள் ஆகியோருக்கு, விவரமான கடிதத்தை அனுப்பி இருக்கிறார் லதா. இன்னமும் மகிழ்ச்சி தரக்கூடிய பதில் எதுவும் வரவில்லை.

எந்த விளையாட்டுப் போட்டிக்காகவும் இந்திய அணி ஒன்று அயல்நாடு செல்வதாயின், அணி உறுப்பினர்களைத் தனியார்தான் ஆதரித்து அனுப்பி வைக்க வேண்டும். மத்திய மாநில அரசுகள் செலவுகளை ஏற்க மாட்டா... பி. டி. உஷாவைப் போன்ற பிரபலங்களை 'ஸ்பான்ஸர்' செய்யப் போட்டி போட்டுக்கொண்டு நிறுவனங்கள் முன்வரலாம். ஆனால் ஆரம்ப நிலை ஆட்டக்காரரான லதா போன்றவர்கள் ஆதரவு கிட்டாமல் அமுங்கிப் போகும் சாத்தியக்கூறுகள் பலமானவை.

பார்ப்போம், லதா அடிக்கும் கோரிக்கைப் பந்து எந்த நிறுவனத்தின் கேட் போஸ்டையாவது கோல் போஸ்ட்டாக மாற்றுகிறதா, கோல் விழுகிறதா என்று!

— ப்ரியன்

படம்: ராஜன்



# “கலைஞருக்கு எங்களைக் கலந்தாலோசிப்பது கசப்பாக இருக்கிறது!”

— தி. மு. க. அரசுக்கு எச்சரிக்கைக் குரல் விடுக்கிறார் இடது கம்யூனிஸ்ட் சட்டமன்ற உறுப்பினர் பாப்பா உமாநாத்.

“சென்ற சட்டமன்றத் தேர்தலில் இடது கம்யூனிஸ்ட் கட்சியும் தி. மு. கழகமும் தொகுதி உடன்பாடு வைத்துக் கொண்டன என்ற ஒரு காரணத்தாலேயே தி. மு. க. ஆட்சி என்ன தவறுகள் செய்தாலும் சுட்டிக்காட்டாமல் இருக்க முடியுமா? தோழமைக் கட்சியானாலும் நாங்கள் ஆக்கபூர்வமான எதிர்க்கட்சியாகவே செயல்பட விரும்புகிறோம். நட்புடன் நாங்கள் இடித்துரைக்கும் போது தி. மு. க. சிறந்த ஆலோசனைகளை ஏற்று நல்லாட்சி வழங்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

“ஆனால் தி. மு. க. வினர் எங்களை எந்த விஷயத்திலும் கலந்தாலோசிப்பது கிடையாது. மத்தியில் உள்ள தேசிய முன்னணியில் தி. மு. க. ஓர் அங்கம். அங்கே தேசிய முன்னணிக்கு நிபந்தனை இல்லாத ஆதரவு கொடுக்கிறது இடது கம்யூனிஸ்ட். இதற்கு அனுசரணையாகப் பிரதமரும் ஆதரவு தரும் கட்சிகளைக் கலந்தாலோசித்து அணைத்துக் கொண்டு போகிறார். இங்கே கலைஞருக்கு அப்படி செயல்படுவது கசப்பாக இருக்கிறது.

“குறைந்தபட்சம் மக்களை நேரடியாகப் பாதிக்கும் பிரச்னைகளில் முடிவெடுக்கும் போதாவது கலைஞர் எங்களைக் கலந்து ஆலோசிக்கலாமே! ஆனால் அவர் அப்படிச் செய்வதில்லை.

பஸ் கட்டண உயர்வுக்கு முன்னரும், சினிமா கட்டணங்களை ஏற்றுவதற்கு முன்னரும், கலைஞர் எங்கள் கருத்துக்களைக் கேட்டாரா? இல்லையே. தி. மு. க. அரசு பஸ் கட்டணத்தை உயர்த்தியதற்காகத் தமிழகம் முழுவதும் மக்கள் வருத்தம் கொண்டிருக்கிறார்கள்.

“கொள்கை ரீதியாகவும் தி. மு. க. வுக்கும் எங்களுக்கும் வேற்றுமைகள் உண்டு. தமிழகத்தில் மேல்சபை வருவதை நாங்கள் எதிர்க்கிறோம். ஆனாலும் இது சம்பந்தமாகத் தி. மு. க. வினர் கொண்டு வந்த தீர்மானம் தோற்றுவிடாமல் இருக்க, வோட்டெடுப்பு அன்று நாங்கள் சட்டசபைக்குச் செல்லவில்லை. இப்படியாக எங்கள் எதிர்ப்பை வெளிப்படுத்திய அதே சமயத்தில் தோழமை கட்சியை விட்டுக் கொடுக்காமலும் இருந்தோம்.

“இந்திய ராணுவத்தை முதல்வர் வரவேற்கப் போகாததை நாங்கள் வெளிப்படையாகவே ஆட்சேபித்தோம். முதல்வர் ராணுவத்தைச் சற்று அவதூறாகவும் பேசினார். இதை நாங்கள் கடுமையாகக் கண்டிக்கிறோம்.

“இவை எல்லாவற்றையும் விட எங்களைக் கோபப்படுத்தும் விஷயம், தொழிற்சாலைகள், அலுவலகங்கள் ஆகியவற்றின் வாயிலில் ஊழியர்கள் தங்கள் எதிர்ப்பை ஜனநாயக ரீதியில் தெரியப்படுத்துவதற்குத் தடை போட்டதைத்தான்! சம்பந்தப்பட்ட இடங்களுக்கு அருகில் எதிர்ப்பைத் தெரிவித்தால்தான் நல்ல பலனிருக்கும். அதை விட்டுவிட்டு, ஆவடி தொழிற்சாலை விவகாரத்துக்குச் சேப்பாக்கம் விளையாட்டு

மைதானம் எதிரில் நின்று கத்தினால் என்ன பிரயோஜனம்?

"சட்டசபையில் இந்தப் பிரச்னை எழுப்பப்பட்ட போது அ. தி. மு. க. வும் எங்களோடு சேர்ந்து வெளிநடப்பு செய்தது. உடனே தி. மு. க. வினர் 'புது அணியோ?' என்று கிண்டலடித்தனர். இப்படி பல பிரச்னைகளில் எங்களது நிலையை அவர்களால் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

"தமிழகமெங்கும் தி. மு. க. அரசின் மீது பரவலான அதிருப்தி இருக்கிறது. அது வளர்ந்து கொண்டே இருக்கிறது. இவர்களது இலவச அரிசித் திட்டம் எதிர்பார்த்த ஆதரவைத் தரவில்லை. மாறாக வெளி மார்க்கெட்டில் ஏறும் அரிசி விலையைக் கண்டு மக்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள். லஞ்ச லாவண்யத் தொடர் கதை: முடிவுகளை எடுப்பதில் மெத்தனம். அதிகாரிகளைக் கண்டித்து ஆட்சி செய்யும் தைரியம் அரசுக்கு வரவில்லை.

"தி. மு. க. மைனாரிட்டி வோட்டுக்கள் பெற்று ஆட்சிக்கு வந்த கட்சி. 'எங்களுக்கு வோட்டுப் போடாதவர்களுக்கும் நான் முதல்வராக இருந்து செயல்படுவேன்' என்றார் கலைஞர். அந்த எண்ணத்தை அமுல் படுத்தச் சிறந்த வழி, எங்களைப் போன்ற தோழமை உணர்வு கொண்ட எதிர்க் கட்சியினரைக் கலந்தாலோசித்துச் செயல்படுவதுதான்."

சந்திப்பு: **தில்லப்பா**
படம்: **ராஜன்**

## தலைநகர்ச் செய்திகள்:



# பரம எதிரிகளின் சந்திப்பு



• ஏப்ரல் மாதம் பன்னிரண்டாம் தேதியும், பதினாறாம் தேதியும், பரம எதிரிகளான அஜித் சிங்கும் தேவிலாலும் சந்தித்துப் பேசிக் கொண்டார்கள். காலையுணவுச் சந்திப்பு. திடீர் திடீரென்று சாமியாட்டம் ஆடுகிற தேவிலாலிடம், யாரோ போய் ஜாட் முன்னணி அமைக்கலாம் என்று சொல்லி உருவேற்றி வைத்திருந்தார்கள். கூடவே யாதவர்களையும் சேர்த்துக் கொண்டால் சண்டிகர் முதல் பீகார் வரை ஜாட் முன்னணி செல்வாக்கு ஓகோ என்று இருக்கும் என்பது திட்டம். அஜித்சிங்கிடமும் ஆதரவு கேட்டிருக்கிறார் 'தாவ்'. 'ஐடியா நன்றாகத்தான் இருக்கிறது' என்று முதலில் அஜித் சிங் சொன்னாலும், தேவிலால் ஏன் நம்மிடம் இப்போது குழைகிறார் என்று யோசிக்க வைத்ததாம். வி. பி. சிங்கை மிரட்டிப் பணிய வைக்கத்தான் இந்த ஜாட் முன்னணி யோசனை என்று, 'தாவ்' அணியினர் திட்டமிடுவது அஜித்சிங்குக்குத் தெரிந்து விட்டது. எனவே யோசனையை ஏற்க இறுதியில் மறுத்து விட்டாராம்.

• அரசியல் விவகாரக் குழுவின் அனுமதி இன்றி இ. காங்கிரஸ் எம். பி.க்கள் எந்த விவகாரத்தையும் மக்களவையில் பேசக் கூடாது என்கிறது ஓர் அறிக்கை. ராஜீவின் ஜால்ராக்கள்தான் இதை வெளியிட்டிருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. சில சமயம், கட்சியின் கொள்கை என்ன என்றே தெரியாத அளவுக்கு, ஆளுக்கு ஆள் பேசுவதால்தான் இந்த அறிக்கையாம். இனி தம்மிடம் எல்லா எம்.பி.க்களும் ஒரு மணி நேரம் தினசரி, தாங்கள் பேசப் போகும் பிரச்னை குறித்து விவாதிக்கலாம் என்று ராஜீவ் சொன்னாராம். ஒரு மணி நேரத்தில் எல்லாரும் சேர்ந்து ராஜீவிடம் என்ன பேச முடியும் என்பதுதான் இ. காங்கிரஸ் எம். பி.க்களின் இப்போதைய பிரச்னை!

தொகுப்பு: **சித்தார்த்**

# ஏறி வந்த ஏணிப்படிகள்

ஆர்.கே.பத்மா



தெருவில் கிரிக்கெட் விளையாடும் பையன்களின் சப்தம் கேட்க ஆரம்பித்து விட்டது. சாயந்திரம் ஐந்து மணி என்று அர்த்தம். ஏழு மணி இருட்டில் பந்து காணாமல் போகும்வரை இனி இரைச்சலாக இருக்கும்.

பிரம்பு நாற்காலியை வராந்தாவில் போட்டுக் கொண்டு உட்கார்ந்த போது இன்னும் இரண்டு மணிநேரம் பொழுது போய்விடும் என்று சந்தோஷமாக இருந்தது.

கூடவே அவ்வப்போது தலைதூக்கும் எண்ணமும் வந்து பக்கத்தில் உட்கார்ந்து விட்டது.

அறுபத்திஐந்து வருஷ வாழ்வில் இது தவறான முடிவோ? ரவியோடு நிரந்தரமாக வந்து இருக்க ஒப்புக் கொண்டிருக்கக் கூடாதோ? எத்தனையோ முடிவுகளை எடுத்திருக்கிறேன்... வேலையில், வீடு கட்டுவதில், வீட்டில் நடந்த கல்யாணங்களில்... எதுவுமே திரும்பி முகத்தில் அடித்ததில்லை....

இப்போதுதான் நிஜம் வலிக்க வலிக்க முகத்தில் அடிக்கிறது. "உங்களுக்குத்தான் வயசாயிடுச்சி இல்லை. சும்மா தொண தொணங்காம ஒரு பக்கம் கம்னு இருங்களேன்." — இப்படிக் கேட்க நேரிடும் என்று கற்பனையில் கூட எதிர்பார்த்ததில்லை. பார்வதி இருந்தால் இப்படிப் பேசுவாளா என்று துக்கம் ஏற்பட்டது.

பார்வதி பட்டென்று போய்விட்டதும் தான் பிள்ளை வந்து என்னை அழைத்துக் கொண்டான்.

நான் வேலை பார்த்து ஓய்வு பெற்ற அந்தக் காஞ்சிபுரத்தில் நண்பர்கள் நிறையப் பேர் இருந்தார்கள். அங்கே யாரும் "சும்மா தொணதொணங்காம ஒரு பக்கம் இருங்க" என்று சொல்லவில்லை.

ரமா வேகமாக வாசற்கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தான். பத்து நிமிஷத்தில் யூனிஃபார்மைக் கழற்றி கலர் டிரஸ்ஸில் புகுந்து கொண்டு, டிபன் சாப்பிட்டுவிட்டு சைக்கிளை எடுத்துக் கொண்டு எங்கே யாவது கிளம்பிவிடுவான். இவனுக்குக் கூட என்னோடு கொஞ்ச நேரம் பேசப்பிடிப்ப தில்லை.

"சைக்கிளை அவ்வளவு வேகமாக ஓட்டாதே ரமா."

"போ தாத்தா... உனக்குச் சும்மா வேற வேலையே இல்லை!"

"ரமா, கணக்கு ஹோம் ஒர்க் இருக்காம்மா? தாத்தா சொல்லிக்குடுக்கவா?"

"அப்பா, அவனோட நியூ மாத்தமாடிக்ஸ் எனக்கே புரியலை. உங்க இண்டர்மீடியட் கணக்கு இல்லைப்பா இது... அவனுக்கு நல்ல டீச்சர் கிட்டே டியூஷன் வச்சிருக்கேன்" ரவியே குறுக்கே வெட்டுகிறான்.

எப்படி இங்கே இருக்கப் போகிறேன்? எத்தனை காலத்திற்கு? எப்படி மனசு ஒன்றாத இடத்தில் வாழ்நாள் முழுவதும்



'டாங்க்'குகள் என்ற போர்க்கருவிகள் 1915 — இல் பிரிட்டிஷாரால் முதலில் செய்யப்பட்டன. இதை எதிரிகள் தெரிந்து கொண்டுவிடக் கூடாதே என்பதற்காக, யாராவது கேட்டால் சகாரா பாலைவனத்திலுள்ள பிரிட்டிஷ் துருப்புக்களுக்குத் தண்ணீர் கொண்டு போகக் கட்டப்பட்ட வண்டி என்று சொல்லும்படியாக எல்லோருக்கும் உத்தரவிடப்பட்டிருந்தது. அதன்படி 'டாங்க்' என்ற பெயரில் அதனையழைத்தனர். நாளடைவில் அந்தப் பெயரே நிலைத்துவிட்டது!

— எஸ். முகம்மது யூசுப்.

இருக்க முடியும்....?

கேள்விகளுக்குத் தடை போடுகிற மாதிரி ரமா வந்து எதிரே நின்றாள்.

''தாத்தா... என்ன கண்ணைத் திறந்துகிட்டே தூங்கறியா?''

''இ....இல்லையே கண்ணு... என்ன வேணும்?''

''உங் கிட்டே கொஞ்சம் பேசணும்.''

''என்ன?'' என்றேன் நம்பிக்கை இல்லாமல். என்னிடம் பேசுவதற்குக் கூட ஒரு ஜீவன் இருக்கிறதா?

அடுத்த வினாடி உள்ளேயிருந்து இன்னொரு பிரம்பு நாற்காலியைத் தூக்கிக் கொண்டு வந்தாள்.

எதிரில் உட்கார்ந்து கால்மேல் கால் போட்டுக் கொண்டாள்.

''உங்கிட்ட பேசணும்னேன்'' என்று குனிந்து முகத்திற்குப் பக்கத்தில் இரைந்தாள்.

''ஷ்ஷ்... மெதுவா..... எனக்குக் காது டமாரம் இல்லை'' என்றேன். என்ன பேசப் போகிறாள்....! நேற்று பிக்ஸட் டெபாஸிட் புதுப்பித்த ரசீது கண்ணில் பட்டிருக்குமோ. ஏதாவது சாமான் வாங்கப் பணம் கேட்பாளோ. ரவியோ இல்லை இவள் அம்மாவோ சொல்லிக் கொடுத்திருக்கலாம், தாத்தாவிடம் கேட்டுப் பார் என்று...

''.....ம்ம்... வந்து..... தாத்தா, நீ இன்னிக்கு என்ன சாப்பிட்டே?'' என்றாள் கண்ணைச் சுருக்கிக் கொண்டு.

''நீ டிபன் பாக்ஸில சாப்பிட்டதை நான் தட்டுல சாப்பிட்டேன்.'' — என்ன திடீர் பரிவு?

''அப்புறம் வந்து.... மத்தியானம் தூங்கினியா? என்ன கனவு வந்தது?''

''ம்ம்.... ஹிண்டு படிச்சேன்... அது சரி உன் சைக்கிள் ரிப்பேரா... என்ன இந்தக் கிழவன்ட்ட வம்பு பண்றே?''

ரமா நகத்தைக் கடித்தாள். உடனே அதைத் தடுக்க வேண்டும் போலிருந்தது. சொன்னால் கோபித்துக் கொண்டு எழுந்து போய்விடுவாளோ என்று கஷ்டப்பட்டுப் பொறுத்துக் கொண்டேன்.

''வந்து... நான் தினமும் உன்னோட பேசப் போறேன்... சாயந்திரம் ஒரு மணி நேரம்... அதான்'' என்றாள். முகத்தில் கூச்சம் எட்டிப் பார்த்தது. இப்போது கையில் வலப்புறப் பின்னல் சுருண்டு நீண்டது.

''சொல்லு தாத்தா.... நீ கிரிக்கெட் ஆடியிருக்கியா?'' மனசு பரபரத்தது. நம்ப முடியவில்லை. என்ன இந்தத் திடீர் கரிசனம்.

''சரி தாத்தா... ஸிக்ஸ்-ஒ-க்ளாக் ஆயிடுச்சு.... நாளைக்குச் சொல்லு மீதியை.''

''ஏய் இங்கே வா... யாரு சொல்லிக் குடுத்தது இதெல்லாம்?'' கையைப் பற்றிக் கொண்டேன். ''அப்பாவா?''

அவள் 'ஆமாம்' என்று சொல்ல வேண்டுமென்று ஏக்கமாக இருந்தது.

ரமாவின் தலை இல்லை என்று ஆடியது.

''இரண்டு நாள் முன்னாடி நான் எக்ஸ்கர்ஷன் போயிருந்தேனே... எங்கேன்னு கேக்கலையே?''

''நீ எக்ஸ்கர்ஷன் போனதே எனக்குத் தெரியாதே?''

''ஸாரி தாத்தா... இனிமே உங்கிட்டே எல்லாம் சொல்றேன். எங்க ஸ்கூல்ல எங்களை ஒரு ஹோமுக்கு அழைச்சிட்டுப் போனாங்க. அங்கே உன்னை மாதிரி நிறைய தாத்தா, பாட்டி எல்லாம் இருக்காங்க. அவங்களுக்கெல்லாம் யாரும் ஃபிரண்ட்ஸே இல்லையாம். அதனால நாங்க அவங்களுக்கு பிஸ்கட், பழம் இதெல்லாம் குடுத்துட்டு, அவங்களோட ஜாலியா ஒரு நாள் பேசிக்கிட்டிருந்தோம். அவங்க எங்களோட விளையாடினாங்க. சாயந்திரம் நாங்க கிளம்பினதும் சில பேர் அழ ஆரம்பிச்சுட்டாங்க. நாங்க இனிமேல் அடிக்கடி வர்றோம்ன்னு சொல்லிட்டு வந்தோம்.

''அப்புறம்?''

''அங்கே எங்க ஸ்கூல் ஹெச். எம். மாதிரி ஒரு வயசான ஆண்ட்டி இருந்தாங்க. அவங்க எங்ககிட்டே உங்க வீட்டுல இந்த மாதிரி தாத்தா, பாட்டி இருக்காங்களா? நீங்க அவங்களோட விளையாடுவீங்களான்னு நிறையக் கேட்டாங்க. பாவம், உனக்கும் யாரும் ஃபிரண்ட்ஸே இல்லையே... அதனால் தினமும் உன்னோட ஒரு மணி நேரமாவது பேசிக்கிட்டிருப்பேன். அப்பத்தான் எங்க டீச்சர் என்னை 'குட் கர்ள்'னு சொல்லுவாங்க.''

மனசு நெகிழ்ந்து போனது. பிஞ்சுகளின் உள்ளத்தில் நல்ல விஷயங்களை விதைப்பவர்களும் இருக்கிறார்களா? அவர்களைப் பார்த்து வரவேண்டும்.

**"வ**ணக்கம் மேடம்... நீங்கதான் இந்த முதியோர் இல்லத்தோட நிர்வாகியா?''

''ஆமாம் சார்.''

''என் பேத்தி உங்களைப் பத்திச் சொன்னா. ஒரு நல்ல சுபாவத்தைக் குழந்தைங்க மனசுல விதைச்சிருக்கீங்க. அதுக்காக உங்களைப் பாராட்டவும், அப்படியே ஒரு விஷயம் கேக்கவும் வந்தேன்.''

''என்ன விஷயம்?''

''வந்து, இங்கே வந்து தங்கிவிட வேண்டும்னு என்னோட விருப்பம். அதற்கு என்ன கட்டணம் என்கிறதைப் பற்றி.....''

''மன்னிக்க வேண்டும். உங்களுக்கு மகன், மருமகள்னு உங்களைப் பாத்துக்க ஒரு குடும்பம் இருக்கு. அப்படியிருக்க....''

''மேடம்... அது வேறு விஷயம்... நான் கடைசி வரை கௌரவமா இருக்க ஆசைப்படுகிறேன்... நீ சும்மா உன் வேலையைப் பார்த்துக் கொண்டிரு அப்படின்னு என்னை அலட்சியப்படுத்துற, அந்தத் தனிமை மிக்க வீட்டுல வசிக்க எனக்கு விருப்பமில்லை... இந்தச் சூழ்நிலையில எனக்குத் துணை இருக்கும்னு தோணுது....''

''நீங்க மறுபடியும் மன்னிக்கணும் சார்... இது உறவு முறையில் யாருமில்லாதவர்களுக்கான தொண்டு நிறுவனம். உறவு மனிதர்கள் இருக்கும்போது அவர்களோடு வாழப் பிடிக்காதவங்களுக்கானது அல்ல."

''ரொம்ப சந்தோஷம்.... என்னுடைய வேதனையைப் புரிஞ்சுக்கிற சக்தி இல்லாதவர் நீங்க... உங்களைச் சொல்லியும் தப்பில்லை... என்னோட நேரம்.. நான் வரேன்.'' எழுந்தேன்.

''ஸாரி சார். உங்களைப் புண்படுத்தறது என் நோக்கமில்லை. உங்களுடைய வருத்தம் என்னன்னு எனக்குச் சரியாப் புரியலை. இந்த விடுதியில் வந்து தங்குகிற அவசியம் உங்களுக்கு இல்லைன்னு நினைக்கிறேன். உங்க பிரச்னை என்ன?''

''என்னால என் மகன் குடும்பத்தோட ஒட்டமுடியலை. நான் எது சொன்னாலும் அது அவங்களுக்கு பிடிக்கலை. வாயை மூடிக்கிட்டுச் சும்மா இருன்னு சொல்றாங்க. என் மனைவி இறந்த பிறகு மகனோடு வந்து இருக்கிற நிர்ப்பந்தம் ஏற்பட்டுப் போச்சு. ஆனா வீட்டுல எனக்கு எந்த மரியாதையும் இல்லை.''

எங்கள் பேச்சு நீண்டு வேறு விஷயங்களுக்குத் திரும்பியது. அந்தப் பெண்மணியின் பெயர் ராதா. அவளும் ஏதோ ஓர் அரசாங்க அலுவலகத்தில் பழுப்புக் காகிதங்களோடு போராடி ஓய்வு பெற்றவள் தான். இளம் வயதில் கணவர் மறைந்த பிறகு வேறு உறவுகள் இல்லை என்றாள்.

''நான் ஒண்ணு சொல்றேன். நீங்க அதை விருப்பு வெறுப்பு இல்லாம யோசிச்சுப் பாக்கறீங்களா?'' என்றாள் ராதா திடீரென்று.

''சொல்லுங்க.''

''நாம வயசுல மூத்தவங்க. உங்க மகனோ, மருமகளோ, பேரக் குழந்தைகளோ உங்க வயசை இன்னும் அடையலை. ஆனா நாம அவங்க வயசைத்தாண்டி ரொம்பத் தொலைவு வந்துட்டோம். அவங்களால நம்ம லெவலுக்கு ஏறி வந்து நம்ம கவலையை, வருத்தத்தை, தனிமையை உணர முடியாது. ஆனா நம்மால அவங்க இளமையோட பிடிவாதத்தை, சுதந்திரத்தை, வேகத்தைப் புரிஞ்சுக்க முடியும் இல்லையா?''

''ஆமாம்.''

''அதனால வாழ்க்கையை அவங்க பார்வையில் கவனியுங்க சார். அப்பத்தான் நீங்க அவங்கள்ல ஒருத்தராவீங்க. ரமாகிட்டே பேசும் போது ஒரு குழந்தையோட லாங்வேஜ்லதான் நான் பேசுவேன். உனக்கு நிறைய ஃபிரண்ட்ஸ் இருக்காங்க. தாத்தாவுக்கு ஃபிரண்டே இல்லை. நீ 'குட் கேர்ளா' வரணும்னா தாத்தாவுக்கு நீ ஃபிரண்டாகணும்னு சொன்னேன். அது வேலை செய்ய ஆரம்பிச்சிருக்கா இல்லையா?''

நான் ராதாவை ஆழ்ந்து நோக்கினேன். பிரச்னையின் மறுகோணத்தை அப்போது தான் என் அறிவு கண்டு கொண்டது.

வாழ்க்கையைப் பற்றி இதுவரை நான் சிந்தித்திராத ஒரு கண்ணோட்டத்தை எனக்கு அளித்தமைக்காக ராதாவை நோக்கி நன்றியுடன் கரம் கூப்பினேன்.

**ஆரணி தொகுதி வாசகர்களே!**

**கல்கியின் மாதம் ஒரு தொகுதி என்ற திட்டத்தின்கீழ் உங்கள் தொகுதி நிலைமை மற்றும் அபிவிருத்திக்கான யோசனைகளை எழுதி அனுப்பக் கடைசித் தேதி: 9.5.90**

**உறையின் மேல் மாதம் ஒரு தொகுதி என்று கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும்!**

**— ஆசிரியர்.**

மாதம் ஒரு தொகுதி



# விபரங்கள் இலவசம் இலவசம்

## ''தபாலில் ஆங்கிலம் பயில இதோ எளியவழி''



கடலில் திசை தெரியாமல் தவிப்பவர்களுக்கு ''கலங்கரை விளக்கு'' ஒளி தந்து வழி காட்டும் அதுபோல் வாழ்வில் வளம் காணத் துடிப்பவர்களுக்கு முன்னேற்றத்திற்கான வழிகளை நாங்கள் கூறுகிறோம்.

பள்ளிக்கூடத்தில், கல்லூரியில் படித்து விட்டு ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி பேச முடியாமல் தவிக்கிறீர்களா ?

சாதாரண தொழிலாளியாக இருந்து கொண்டு ஆங்கில அறிவை எப்படியாவது படித்து முன்னேற வேண்டும் என்று நினைக்கிறீர்களா ?

எல்லோரும் ஆங்கிலத்தில் பேசும்போது நம்மால் நாலு வார்த்தை கூட பேச முடியவில்லையே என்று ஏங்குகிறீர்களா ?

படிக்கக்கூடிய காலத்தில் படிக்காமல் தற்போது தொழில் or வியாபாரத்தில் ஈடுபட்டு இனி எப்படி படிக்க முடியும் என்று ஆழ்ந்த யோசனையில் மூழ்குகிறீர்களா ?

கவலையை விடுங்கள் முன்னேற்றத்திற்கான எளிய வழிகள் இதோ : எளிய முறையில் தமிழ் மூலம் தபாலில் ஆங்கிலம் பயிலுவதற்கான சிறந்த பயிற்சியை இந்தியாவிலேயே தலைசிறந்த ஆங்கில கல்வி நிறுவனமாகிய...

''தி அமெரிக்கன் இன்ஸ்டியூட்'' எற்று பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு மிகச் சிறந்த பயிற்சி அளித்து வருகிறது. பல்வேறு ஆங்கில பேராசிரியர்களே இப்பயிற்சியை பாராட்டியுள்ளனர் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

நீங்கள் செய்ய வேண்டியது ஒரு போஸ்ட் கார்டில் உங்கள் முகவரியை எழுதி தி அமெரிக்கன் இன்ஸ்டிட்யூட், எல்லீஸ் நகர், மதுரை-16, என்ற முகவரிக்கு அனுப்புங்கள். இலவச விபரங்கள் வந்து சேரும்.

இது தவிர தமிழ் மூலம் தபாலில் கணக்கர் பயிற்சி பெற்றால் ஒவ்வொரு ஊரிலும் கணக்கர் வேலைக்கு ஏராளமானவர்கள் தேவைப்படுவதால் இதில் மாதம் ரூ. 2000 வரை சம்பாதிக்க வாய்ப்புண்டு, எளிய சுயமான வேலை வாய்ப்பு.

தமிழில் தபால் மூலம் சிறப்பாக ஆங்கிலம் பயில்வதற்கும், தமிழில் தபால் மூலம் கணக்கர் பயிற்சி பெறவும் உடனே தபால் கார்டில் எழுதவும்.

**தி அமெரிக்கன் இன்ஸ்டிட்யூட்,**

**P.B. No. 16, எல்லிஸ் நகர், மதுரை-16.**

# மணல்வெளி மான்கள்

## 17



மனிதன் பிறக்கும்போது சுதந்திர மாகத்தான் பிறக்கிறான்; ஆனால் அதற்குப் பின் எல்லா இடங்களிலும் அவன் சங்கிலி களோடுதான் இருக்கிறான்.

— இது யார் சொன்னது?

புல் மேட்டிற்குப் போகும் பஸ் மெதுவாய் மலையேறிக் கொண்டிருந்தது. தலைமுடி யைப் பிய்த்துக் கொண்டு போவது போல் மலைக்காற்று அடித்தது.

கௌதம் தலையிலிருந்து உயர உயர வீடு களும் மரங்களும் வயல்களும் சிறுத்துக் கொண்டே செல்வதை மேலோட்டமாக வேடிக்கை பார்த்தவாறு யோசித்தான். சட் டென்று பிடிகிட்டியது.

ரூஸோ! சமுதாய ஒப்பந்தம் என்ற புத்த கத்தில், என்ன பொருத்தமான வாக்கு!

விட்டலாபுரத்தின் சங்கிலிகள் மட்டு மல்ல. புல்மேட்டிலும் அவனைப் பந்தப் படுத்தும் சங்கிலிகள் உண்டு. இன்னும் தான் இருந்து கொண்டுதானிருக்கிறேன் என்று நினைவூட்டுவது போல் அங்கிருந்து அழைப்பு வந்துவிட்டது.

வேலூரிலிருந்து வீடு திரும்பியதும் சௌந்தரம்மாள் சொன்ன இரண்டாவது சங்கதி அது. அவனுடைய அப்பா கௌ தமைப் பார்க்க வேண்டும் என்று சொல்லி யனுப்பியிருந்தாராம்— பஸ் டிரைவர் மூலம்.

அவள் சொன்ன முதல் செய்தி நித் யாவை அடுத்த வெள்ளிக்கிழமை யாரோ திருவண்ணாமலையிலிருந்து பெண் பார்க்க வரப் போகிறார்கள் என்பது.

''உங்களுக்கு எப்படித் தெரியும் பெரியம் மா?''

''கொழாயடியிலே தண்ணி பிடிக்கக் காத்திருக்கிற பொம்பளைங்களுக்குத் தெரி யாத சங்கதி இருக்காது கௌது!''

அவன் ஒன்றும் பேசவில்லை. மனத்தில் வெறுமை நிலவியது.

''இப்ப தெரியுதா ஊர் வ ம் பு ஒதவா துன்னு!''

''என்ன சொல்றீங்க பெரியம்மா?''

''ஒனக்கு வேண்டாதவங்க யாரோ ஒங்க ரெண்டு பேரையும் பாத்திருக்காங்க! நம்ம ஊரைப்பத்தி ஒனக்குத் தெரியாது.''

அவன் சௌந்தரம்மாளையே பார்த் தான்.

''சொல்ல வேண்டியவங்க கிட்டே போய் ஒரு விஷயத்தைச் சொல்ல மாட்டாங்க. எங்கே சொல்லக் கூடாதோ அங்கே போயி மூட்டி விட்டுட்டு வேடிக்கை பார்ப்பாங்க.''

அவனுள் ஒரு சந்தேகம் நிழலாடியது. சௌந்தரம்மாள் அதை ஊர்ஜிதம் செய் தாள்.

''துளசிங்கம் தான் இதுக்கு ஏற்பாடு பண்ணியிருக்கான் கௌது.''

அவன் புருவம் சுருங்கிற்று.

வையவன்

''திருவண்ணாமலைக்காரங்க அவனுக்கு வேண்டியவங்களாம். நித்யாவோட அப்பாவை ஆள் விட்டு அளைச்சு அவங்க பொண்ணு பார்க்கவரலாமான்னு கேட்டிருக்கான். அந்தப் பெரியவரும் தலையாட்டிட்டு வந்திருக்காரு.''



இது நித்யாவுக்குத் தெரியுமா என்று ஒரு கேள்வி எழுந்து அவன் மனசுக்குள் நின்றது. அதைச் சௌந்தரம்மாவிடம் கேட்பது தகாது.

''இன்னிக்கு நீ புல்மேட்டுக்குக் கௌம்பு.''

''நாளைக்கு வக்கில் வரச் சொல்லியிருக்காரே பெரியம்மா.''

''எத்தனை மணிக்கு?''

''பத்து மணிக்கு.''

''நேரா புல்மேட்டிலிருந்து அப்படியே போயிடு. இன்னிக்குப் போயி அப்பாவைப் பார்த்துட்டு வா. என்ன விஷயமோ? ஒடம்பு சரியில்லியோ என்னமோ... பார்க்கணும்னு ஆள் விட்டிருக்காருன்னா ஒடனே பொறப்படறதுதான் கரைக்டு.''

நித்யா? சௌந்தரம்மாளுக்கோ அல்லது நித்யாவின் பெற்றோருக்கோ கூட அவள் மனசு தெரியாது — அவனுக்குத் தெரிந்த அளவு. நித்யாவை அவள் விருப்பத்திற்கு மாறாக எவரும் நிர்ப்பந்திக்க முடியாது.

அவள் வழி தனி. விருப்பு வெறுப்புக்கள் தனி. நிர்ப்பந்தங்களை எதிர்க்கும் முறைகளும் தனி.

பாவம் துளசிங்கம். இதெல்லாம் அவனுக்குத் தெரிந்திருக்காது. அவள் எப்படிப் பட்டவள் என்று விட்டலாபுரம் புரிந்து கொள்ள அநாவசியமாக வாய்ப்பு ஏற்படுத்தி விட்டான்.

**ப**ஸ் மேலும் உயரத்துக்கு ஏறியபோது கீழே தரையில் ஒரு பெரிய வயல் ஒரு பச்சைக் கைக்குட்டையளவு சுருங்கிக் காட்சியளித்தது.

எல்லாப் பெரிய விஷயங்களும் உயரே போகப் போகச் சுருங்கி விடுகின்றன. ஒரு கட்டத்தில் புள்ளியாகச் சிறுத்து மறைந்தே போகின்றன.

இதுதான் பார்வையின் எல்லையா?

ரூஸோவின் சங்கிலிகள் கூடக் கட்டுண்டு போகச் சித்தமாயிருப்பவனுக்குத்தானா? கட்டுப்படாதவர்களுக்கு....?

அவன் பிலோமினாவை நினைத்துக் கொண்டான். பின் இன்று முதல் துறவியாகி விட்ட அந்த ஜைனப் பெண்ணை. மனசு விசுக்கென்று பாய்ந்து கபிலவஸ்துவை விட்டுப் புறப்பட்ட சித்தார்த்தனிடம் நின்றது.

இவர்கள் முற்றிலும் விடுதலையானவர்களா? இல்லையென்று தோன்றியது. மனித சமூகம் இவர்களுக்காகக் காத்திருந்தது; காத்திருக்கிறது. அந்த காத்திருப்பு இவர்களுக்குப் புரிந்தது; புரிகிறது.

சுவாசிக்கும் காற்றில், குடிக்கும் நீரில் அருந்தும் உணவில் மனித சமூகத்தின் காத்திருப்பு நொடிக்கு நொடி அஞ்சல் செய்யப்பட்டுக் கொண்டே இருந்தது; இருக்கிறது.

எதற்காக மனிதர்கள் காத்திருக்கிறார்கள்? பணம்? புகழ்? பதவி? வெற்றி? நினைத்தது ஈடேற?

எல்லாம் தாற்காலிகம். இது எல்லோருக்கும் தெரியும். மேலே மேலே இன்னும் இன்னும் என்று அலைகிறபோதும் தெரியும்.

இந்த அலைச்சல் ஓயப்போவதில்லை. அலைகிறவர்கள் அத்தனை பேருக்கும் இது சிறிதளவாவது தெரியும். இந்த ஓட்டப் பந்தயத்தில் ஒருவன் தலையை மற்றவன் மிதித்து ஓடிக்களைத்து மிஞ்சப்போவது நீலாம்பர முதலியாரின் முதுமைப் புலம்பல்கள் தான். அதுவும் தெரிந்ததே.

பின் எதற்குக் காத்திருக்கிறார்கள்?

மனசினுள்ளிருந்து ஒரு குருத்து தலை நீட்டுவது போல் பதில் எழுந்தது. அன்புத் துளிகளுக்காக கல்மிஷமில்லாத, கலப்படமில்லாத அன்புத் துளிகளுக்காக.

இப்போது தன்னோடு பனியுத்தம் தொடங்கியிருக்கிற துளசிங்கத்திற்குக் கூட அதுதான் பிரதானத் தேவையோ?

அன்பின் வழியது உயிர்நிலை — என்ன மஹா வாக்கு!

அன்பு பந்தமல்ல; பாசமல்ல; சங்கிலி கூட அல்ல. அது மலர்வனத்தில் விழும் மழைத்துளி. பிரதிபலன் கோராதது. சுதந்திரமானது. அது கொடை. அதன் மகிழ்ச்சி உல்லாசமானது. கட்டுப்படாதது.

**ட**மாரென்று டயர் வெடித்த ஓசை

கேட்டது. டிரைவர் போட்ட ஏர்—பிரேக்கில் பஸ் ஒரு குலுங்கு குலுங்கியது.

''என்னா மொதலாளி, கதை நம்மூருது தானா?'' என்று கண்டக்டர் பக்கம் பார்த்துக் கேட்டவாறே கதவைத் திறந்தார் டிரைவர்.

''பொறப்பட்டப்பவே ஏர்செக் பண்ணி யான்னு கேட்டேன்... இப்ப மலை மேலே வந்து மொதலாளிப் பட்டம் கட்டறே?'' என்று கண்டக்டரும் இறங்கினான்.

ஏழெட்டுப் பயணிகளுக்குப் பின் கௌதமும் இறங்கினான். பேக்வீலில் கண்டக்டர் ஆசனத்துக்கு நேர்கீழே அவுட்டர் டயர் வெடித்திருந்தது.

பயணிகள் முகத்தில் பரவிய எரிச்சலையும் அதிருப்தியையும் டிரைவர் சிறிது சுவாரஸ்யமாகப் பார்த்தார். பின்பு அபய முத்திரை போல் கையைத் தூக்கி ''கவலைப் படாதீங்க! மேலே ஸ்டெப்னி இருக்கு'' என்றார்.

''மேலே கயிறு கட்டியில்லே வைச்சிருக்கும்?'' என்று சற்றுச் சலிப்போடு சொன்னார் கண்டக்டர்.

''ஒன்னை ஏறச் சொல்வேனா? எதுக்கு இருக்காரு நம்ப ஈரோ... கௌதம் நயினா நீ வண்டியிலே ஏர்றப்பவே நெனைச்சேன். கைகுடுக்க ஒரு ஆளு வருதுன்னு.''

''இந்த ஐஸே வாணாம். மேலே ஏறணும், அவ்வளவுதானே...? தோ வர்றேன்'' என்று சொல்லிவிட்டுக் குறுகிய ஏணியில் கால் வைத்து பஸ்ஸின் டாப்புக்கு மேல் ஏறினான்.

பின்னாலேயே டிரைவரும் இரு ஆபத்துதவிகளும் ஏறினர். கயிற்றை அவிழ்த்து சக்கரத்தை நிமிர்த்தி, வில் துவாரங்களில் மீண்டும் கயிறு நுழைத்து மூவர் இழுத்துப் பிடித்து மெதுமெதுவாகக் கீழிறக்கி, தரை தொட்டதும் அது கிண்ணென்று ஒரு துள்ளு துள்ளுகிற வரை பார்த்துவிட்டு டாப்பை விட்டு இறங்கினான் கௌதம்.

ஸ்டெப்னி மாற்றி 'பர்ஸ்ட்' ஆன டயரை பஸ்ஸில் ஏற்றிக் கிளம்ப மொத்தமாய் அரை மணி நேரம் தாமதம்.

**பு**ல்மேட்டில் இறங்கும் போது இரவு மணி ஏழு. மலை ஏறிக் களைத்துவிட்ட மாதிரி சிங்கிள் பேஸ் மின்வெளிச்சத்தில் தெரு விளக்குகள் உறங்கி வழிந்தன.

**''ஒரே கேள்வியிலேயே இண்டர்வியூவிலே என்னை செலக்ட் பண்ணிட்டாங்க!''**

**''என்ன கேள்வி?''**

**''அதிகபட்சமா உங்களாலே எவ்வளவு தர முடியும்?''**

— எஸ். சுந்தரராஜ்.



நிலா வர நேரமாகும். அரை ஒளியில் புழுதி கிளம்பும் தெருவில், புல்மேட்டுக்கே உரிய ஒரு விநோத மணத்தை மூச்சு முட்ட நுகர்ந்து நடப்பதில் மீண்டும் ரூஸோவின் சங்கிலிகள் மனசில் கலகலத்தன.

ஒவ்வொரு சந்தும் ஒவ்வொரு திருப்பமும், ஒவ்வொரு காலடியும் சொந்த ஊரின் சங்கிலிகளுக்கு எவ்வளவு பிணையுண்டிருக்கிறோம் என்று உணர்த்தின.

வீட்டில் அத்தை மட்டுமிருந்தாள்.

''சௌக்கியமா அத்தே?''

''யாரு?'' கண்ணாடி தூக்கிப் பார்த்தாள் அத்தை. ''அட கௌது... வாடா கண்ணு... எப்ப வந்தே? ஆறரை வண்டியிலே வருவே வருவேன்னு எதிர்பார்த்துட்டு அண்ணன் இப்பத்தான் கொல்லைக்குப் போனாரு.''

அவன் கைகால்முகம் கழுவி அத்தை பிராண்ட் காப்பியைக் குடித்துவிட்டுப் புறப்பட்டான்.

''கடலைக்காய் போட்டிருக்குது. காட்டுப் பன்னி தொந்தரவு ஜாஸ்தியாப் போச்சு. காவலுக்கு வச்ச ஆளு பொஞ்சாதி காயல். இன்னிக்கு மட்டம் போட்டுட்டான். அண்ணன்தான் காவலு. சாப்பிட இங்கியே வந்துடறியா?''

''சமையல் பண்ணிட்டியா, அத்தே?''

''தோ செத்த நாளிலே முடிஞ்சுது. அண்ணன் ஒனக்காக மணிப்புறா அடிச்சு அனுப்பறேன்னு கொண்டு போயிருக்காங்க.''

அப்பாவுக்கு மணிப்புறா பிடிக்கும். வேட்டை பிடிக்கும். அவற்றோடு இறைச்சியும் தனக்குப் பிடிக்காமல் போய் விட்டதை அத்தைக்கு உணர்த்த வேண்டியதில்லை.

''எனக்குப் பசியில்லே அத்தை! சாப்பாட்டுக்காக எதுவும் பண்ணாதே!''

''இதென்னடா கூத்து! நான் ஒத்துக்க மாட்டேம்பா. நீ வந்து சாப்பிட்டுட்டுத்தான் போகணும்.''

அத்தையை மசிய வைக்க முடியாது. யோசித்தான்.

''அப்பா சைக்கிள்ளேதானே போயிருக்காங்க?''

''ஆமா.''

''மறுபடியும் நான் சைக்கிள் எடுத்துட்டு வர்றேன். அது வரிக்கும் அடுப்பு மூட்டாதே என்ன, சரிதானா?''

''நீ சொல்றதிலேயே கோளாறு பண்றியே?''

அவன் அவளைப் பேசவிடாமல் கிளம்பி விட்டான்.

**அ**வர்கள் நிலம் இருப்பது மலையோரம். நிமிர்ந்தால் தெரிவது மலையேறும் காட்டுச் சாலை. வனம் அங்கே தொடங்குகிறது.

கடோத்கஜர்கள் போல் நிற்கும் வன மரங்கள். அவற்றைத் தழுவிப் படர்ந்த



"மலிவு விலைச் சாராயத்தைப் பாலிதீன் பையில் போட்டு விற்றால் மட்டும் போதாதுண்ணே...!"

"அப்புறம்...?"

"பால் பாக்கெட் மாதிரி, காலையிலயும், சாயந்தரமும், வீட்டு வாசல்லேயே கொண்டு வந்து போடறதுக்கும் ஏற்பாடு செய்யணும்!"

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

கொடிகள். மூலிகை மணம் சுமக்கும் காற்று. நிழற்கோலமிடும் நிலா வெளிச்சம்.

முதல் ஏற்றம் கடந்தால் முத்துமாரி சுனை. நேயமும் நிர்ப்பயமும் கைகோத்தது போல் விபூதியும் குங்குமமும் தரித்த திரிசூலம் மட்டும் நட்டிருக்கும். அங்குதான் அப்பாவின் மணிப்புறாக்கள் அடைக்கலம்.

நிலத்தின் மேல் போட்டிருந்த பரண் காலி. அப்பா வேட்டைக்கு.

தனித்து ஒரு லாந்தர் விளக்கு மட்டும் காவலுக்கு எரிந்தது. அவன் பரண் மீது ஏறினான். தலையணை. கம்பளி. போர்வை. ஒரு புத்தகம்.

விளக்கு வெளிச்சத்தில் குனிந்து பெயர் படித்தான். 'மகா அலெக்சாந்தர்' வியந்தான். இதைப் படிக்கிற வயசா அவருக்கு? சட்... படிப்புக்கும் வயசுக்கும் என்ன சம்பந்தம்?"

அவர் அடையாளம் வைத்திருந்த பக்கத்தைப் பிரித்தான்.

'படையெடுப்புக்கு முன் மன்னர் குடும்பத்தின் நிலங்களை அடகு வைத்துவிட்டுக் கிடைக்கக் கூடிய பொன்னையெல்லாம் கடன் வாங்கினார் அலெக்சாந்தர்.

"உங்களுக்கென்று என்ன மிச்சம் வைத்திருக்கிறீர்கள்?" என்று சகாக்கள் கேட்டனர்.

"என் நம்பிக்கைகளை" என்று அலெக்சாந்தர் பதிலளித்தார்.

அவன் பக்கத்தை அடையாளம் கலையாமல் மூடி வைத்துவிட்டுக் காட்டுச் சாலையில் நடந்தான். முத்துமாரி சுனையில் நிலா வெளிச்சத்தின் ஏடு மிதந்தது. நட்டிருந்த திரிசூலத்துக்குப் பக்கத்தில் கையில் துப்பாக்கியோடு அப்பாவின் தலை தெரிந்தது.

"அப்பா!"

அவர் திரும்பினார்.

"எப்படா வந்தே?"

"இப்பதான். பஸ் லேட்டு."

"உக்காரு. இன்னிக்கு என்னமோ பொறாங்களையே காணோம்." அவன் உட்கார அவர் ஒதுங்கி இடம் விட்டார்.

இரண்டு மூன்று நிமிஷம் ஒருவரையொருவர் பார்த்தவாறே உட்கார்ந்திருந்தனர். அது அவர்கள் வழக்கம். பேச்சைவிடப் பார்வையில் அவர் அதிகம் உணர்த்துவார். அவனும். அவரிடம் மட்டும்.

"ஒடம்பு நல்லாயிருக்காப்பா?"

"ஒண்ணும் தொந்தரவில்லே."

அருகில் எங்கோ காட்டுக்கோழி கத்திக் கொண்டே, ஓடியது. சற்று நிசப்தம். அதன் பின் சில்வண்டின் இடைவிடாத ரீங்காரம்.

"வரச் சொன்னீங்கன்னு தகவல் வந்தது."

சிறிது மௌனம்.

"ஆமா. அந்த டிரைவர் மடையன் என்னமோ பொலம்பினான். தொளசிங்கத்தோட தகராறு. மாசிலாவைக் கொளுத்திட்டாங்க. ஆதியைப் பிடிச்சுக்கிட்டுப் போயிட்டாங்கன்னு."

அவன் பதில் பேசவில்லை.

"வாஸ்தவமா?"

"ஆமா."

"இன்ஸ்பெக்டர் யாரு?"

"இருதயராஜுன்னு ராமநாதபுரத்திலேர்ந்து வந்திருக்காரு."

"தேவரா?"

"தெரியாது."

இடைவெளி மௌனத்தைச் சுனைத் தவளைக் கூப்பாடு இட்டு நிரப்பியது.

"ஆதியை பெயில்ல இட்'.ாரத்துக்கு முயற்சி பண்ணியோ?"

"பண்ணேன். முடியல்லே."

தவளை நிசப்தமாயிற்று.

"இந்த டிரைவர் ஒரு தொடை நடுங்கி. எவனாவது எங்கேயாவது மெரட்டினா ஒண்ணுக்கு நாலா ஒளறுவான்."

கௌதம் காத்திருந்தான்.

"ஜாக்கிரதையா இருந்துக்கோ."

"ம்ம்ம்ம்."

சங்கதி அவ்வளவுதான். இதற்கு மேல் அறிவுரையோ, விமர்சனமோ இல்லை. இரண்டு வார்த்தை. அதில் வெளிப்பட்ட பாசக்கலப்பற்ற, அசட்டு உருக்கமற்ற நலம் மட்டும் விரும்பும் உண்மை ஈடுபாடு அவனைத் தாக்கிற்று.

"போலாமா அப்பா?" அவன் எழுந்தான்.

"பொறா?"

"நான் கறி சாப்பிடறதை விட்டுட்டேன்."

"ஓ!"

இருவரும் எழுந்தனர். நிலத்திற்கு இறங்கிப் பரண் மீது உட்கார்ந்தனர். அவருக்காகக் கொண்டு போன பழத்தை உரித்துக் கொடுத்தான் கௌதம். அவனும் சாப்பிட்டான்.

"நீ படு" என்று அவர் புத்தகத்தை விரித்தார்.

படுத்தவுடன் அலைச்சலில் கண் அயர்ந்து விட்டான் கௌதம்.

(தொடரும்)



• ஹவாய் நடனம்

# ஹவா

'மிஸ்டர் இந்தியா' படத்தில் ஜிகினா உடையணிந்து ஸ்ரீதேவி ஆடும் கவர்ச்சி நடனத்திற்கு, கவிதா கிருஷ்ணமூர்த்தி பாடிய 'ஹவா ஹவாய் ஹே' பாட்டுத் தெரியும். பத்து ரூபாய்க்குப் பிளாட்ஃபாரத்தில் விற்கும் ஹவாய் செருப்பு தெரியும். ஆனால் ஹவாய் தீவுகள் பற்றிய எனது ஞானம் பூஜ்யம்தான். இப்படிப்பட்ட எனக்கு ஹவாயின் தலைநகரான ஹானலூலூவுக்குப் பணி நிமித்தம் போய் வரும் வாய்ப்புக் கிடைத்த போது, நண்பர்களும் சக ஊழியர்களும் — இலேசான பொறாமையை மறைக்க முயன்றபடி 'ஹவா ஹவாய் ஹே' என்று வாழ்த்தி அனுப்பினார்கள்! இருக்காதோ பின்னே! பஸிஃபிக் கடற்கரையின் வடக்குப் பகுதியில் உள்ள இந்தச் சொர்க்க பூமி அமெரிக்கா, ஜப்பான் நாடுகளைச் சேர்ந்த கொழுத்த பணக்காரர்கள் மட்டுமே நாடக்கூடிய இடமாயிற்றே!

ஹான்லூலூ விமான நிலையத்தில், ஹவாய் அழகிகள் உல்லாசப் பயணிகளை மலர் மாலை அணிவித்து 'அலோஹா' என்று ஹவாய் மொழியில் கூவி வரவேற்கிறார்கள். இன்று ஹவாய் மொழி அங்கு புழக்கத்தில் இல்லாவிட்டாலும் 'அலோஹா' (ஹலோ, குட்பை) 'மஹோலா' (நன்றி) போன்ற சில வார்த்தைகளை மட்டும் உற்சாகமாக ஹவாயில் உள்ளவர்கள் உபயோகித்தார்கள்.

சுமார் நூறு தீவுகளைக் கொண்ட ஹவாய்த் தீவுகளில், ஏழு தீவுகளில் மட்டுமே மனிதர்கள் வசிக்கிறார்கள். ஹவாய்த் தீவுகளின் மொத்த ஜனத்தொகை பத்து லட்சம். எண்பது சதவீதம் பேர் ஹானலூலூவில் வாழ்கிறார்கள்.

கடந்த முப்பது ஆண்டுக் காலத்தில் — ஹவாய்த் தீவுகள் அமெரிக்காவின் ஒரு பகுதியாக மாறியதிலிருந்து — டூரிஸம் இங்கு பிரமாதமாகத் தழைத்தோங்கியுள்ளது. அன்னாசிப்பழமும், கரும்புத் தோட்டங்களுமே முக்கிய தொழில்களாக இருந்த ஹவாய்த் தீவுகளில், இன்று டூரிஸம்தான் முக்கிய தொழில். உலகிலேயே மிகவும் அழகான கடற்கரைகளைக் கொண்ட ஹானலூலூவிற்கு, வருடத்திற்கு ஐம்பது லட்சம் உல்லாசப் பயணிகள் வருகிறார்கள்!

விமான நிலையத்திலிருந்து வெளியே வந்த உடனேயே, பூத்துக் குலுங்கும் செடி கொடிகளும், பச்சைப் பசேல் என்ற புல் வெளிகளும், அழகிய மரங்களும் நம் கண்களைக் கவருகின்றன. மிதமான சீதோஷ்ண

நிலைகொண்ட ஹானலூலூவின் இயற்கை அழகைப் பாதுகாப்பதில் மிகவும் தீவிரமாக உள்ளது, அமெரிக்க அரசாங்கம். வெளியூரிலிருந்து வரும் பயணிகள் சாப்பாட்டுப் பொருட்களையோ, செடி கொடிகளையோ கொண்டு வர அனுமதி கிடையாது. சந்தேகம் ஏற்பட்டால், கஸ்டம்ஸ் அதிகாரிகள் நம் ஊரில் தங்கம் வைத்திருக்கிறார்களா, விசிஆர் வைத்திருக்கிறார்களா என்று சோதனை செய்வது போல், பெட்டிகளைக் குதறி எடுத்து விடுகிறார்கள்! இதற்கு இரண்டு காரணங்கள்: தீவுகளாக உள்ள ஹவாய்க்கென்று உரிய தாவரங்கள் தவிர, புதிதாக எதையும் அங்கே பயிர் செய்து, அதன் புராதனமான தனித்தன்மையைப் பாழ்படுத்திவிடக் கூடாது என்பது ஒன்று. மற்றொரு காரணம் உணவுப் பொருள்களுடன் கிருமிகள், செடி கொடிகளுடன் பூச்சிகள் என்று எதையாவது கொண்டு வந்து இங்கே பல்கிப் பெருக ஹவாயின் ஆரோக்கியமான, அற்புதமான இயற்கைச் சமநிலை குலைந்து போகுமோ என்ற பயம்.

ஹவாய் பெண்களின் பாரம்பரிய உடை 'ஹவுஸ் கோட்' மாதிரி தோற்றமளிக்கும். 'மூ மூ' என்பது. ஆனால், பல்வேறு ஆசிய, ஐரோப்பிய இனத்தவர் ஹவாய் பழங்குடியினருடன் கலந்து விட்டனர். இன்று ஹவாய் நாட்டின் பொன்நிற அழகிகள் மினி, மைக்ரோ மினி போன்ற கவர்ச்சி ஆடைகளையே அணிகிறார்கள்.

காமேஹமேகா என்ற அரசன் ஹவாய் தீவுகள் எல்லாவற்றையும் தன் ஆதிக்கத்திற்குள் கொண்டு வந்து பல ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். இவனுடைய பிரும்மாண்டமான சிலை ஒன்று, ஹவாயில் உள்ளது. ஆண்டுதோறும் ஜூன் 11 – ஆம் தேதி காமேஹமேகா அரசனின் நினைவு நாளாகக் கொண்டாடப்படுகிறது. அரசு விடுமுறை நாளான அன்று ஊர்வலம், கேளிக்கைகள் என்று ஹானலூலூ விழாக் கோலம் பூணுகிறது.

காமேஹமேகாவிற்குப் பிறகு வந்த காலகுவா என்ற அரசன், ஐரோப்பிய அரசர்களைப் பின்பற்றி அழகிய அரண்மனை ஒன்றைக் கட்டினான். இந்த அரண்மனை.

# ஹவாய் ஹே!

இன்று மியூஸியமாக விளங்குகிறது.

வெளிநாடுகளுக்கெல்லாம் அடிக்கடி பயணம் செய்த இந்த காலகுவா அரசன்,

* எங்கு பார்த்தாலும் பசுமை!



அமெரிக்காவுடன் வர்த்தக ஒப்பந்தம் ஒன்று செய்து கொண்டான். அதன் மூலம் ஹவாய் மண்ணில் கால் ஊன்றிக் கொண்ட அமெரிக்கா, இங்குள்ள பெர்ல் — ஹார்பர் என்ற துறைமுகத்தைத் தன் கப்பற்படைத் தளமாக ஆக்கிக் கொண்டது. துறைமுகத்தில் இடம்பிடித்துக் கொண்ட அமெரிக்கா, கடைசியில் ஹவாயைத் தன்னுடனேயே, ஒரு மாகாணமாக (1959 ஆம் ஆண்டு) இணைத்துக் கொண்டது.

இரண்டாம் உலகப் போரின் பொழுது, Pearl துறைமுகத்தை ஜப்பான் தாக்கியது. மூவாயிரம் அமெரிக்கர்கள் உயிரிழந்தனர். பல கப்பல்கள் மூழ்கின. அதில் மிகப் பெரிய கப்பலான அரிஸோனா கப்பலைப் போலவே, நினைவாலயம் ஒன்றை இத் துறை முகத்தில் எழுப்பியிருக்கிறார்கள். ஹானலூலூவிற்கு வரும் உல்லாசப் பயணிகள், அரிஸோனா மெமோரியலைப் பார்க்காமல் திரும்புவதில்லை.

ஹானாலூலூவிலுள்ள வைகேகி, ஆலே மனோவா, கெய்லுவா போன்ற அழகான கடற்கரைகளை உலகிலே வேறெங்கும் காண முடியாது. கடற்கரைகளின் சுகத்தை இவர்களைப் போல் நன்கு அனுபவிக்கிறவர்களையும் உலகில் வேறு எங்கும் பார்க்க முடியாது!

அமைதியை விரும்பும் உல்லாசப் பயணிகளைப் போல, ஹானலூலூவிலேயே வசிப்பவர்களும் கூட, விடுமுறை நாட்களில் கெய்லுவா போன்ற ஒதுக்குப்புறமான கடற்கரைகளுக்குச் செல்கிறார்கள். ஒரு நாள், பகல் பொழுது முழுவதையும் தனியாகவோ, குடும்பத்துடனோ கடற்கரையிலேயே கழிக்கிறார்கள். இப்படி பல குடும்பங்கள் நாள் முழுவதும் கடற்கரையிலேயே கழித்தாலும், ஒரு சின்ன காகிதத் துண்டைக் கூட கடற்கரையில் எறிய மாட்டார்கள்! இங்குள்ள கடற்கரைகளை அப்படி துப்புரவாக வைத்துக் கொள்கிறார்கள்.

வைகேகி கடற்கரையையொட்டிப் பல நவநாகரீக ஹோட்டல்கள் உள்ளன. மாலை வேளைகளில் இந்த ஹோட்டல்களின், திறந்த வெளி அரங்கில் ஹவாய் அழகிகள், ஹுலா நடனம் ஆட, தீப்பந்தத்தின் ஒளியில் உல்லாசப் பயணிகள், உட்கார்ந்து கடற்கரைக் காற்றை அனுபவித்தவாறு உணவருந்துகிறார்கள். நள்ளிரவு வரை ஜேஜே என்று நியான் விளக்குகளின் ஒளியில் ஜகஜ்ஜோதியாகக் காட்சியளிக்கும் வைகேகி கடைத் தெருவில் நீலப் படங்கள், காபரே நடனங்கள், என்று பெரிய நகரங்களுக்கே உரிய எல்லாவிதமான கேளிக்கைகளும் உண்டு. ஆண்களும், பெண்களும் ஜோடி ஜோடி

யாகத் தங்களை மறந்த நிலையில் இக் கடற்கரையிலும், கடை வீதியிலும் உலாவுவதைப் பார்த்தால் நமக்குத்தான் கூச்சமாக இருக்கும்!

கட்டுப்பாடற்ற வாழ்க்கையின் மோசமான பின்விளைவுகளையும் ஹானலூலூவில் காண முடிகிறது. வருகிற டூரிஸ்டுகளில் பலர் நடத்தை கெட்டவர்களாகவும் இருப்பதால் எய்ட்ஸ் போன்ற பாலுறவு நோய்கள் பற்றிய அச்சம் வெகுவாகப் பரவி இருக்கிறது.

கீழை நாடுகளையும், மேற்கத்திய நாடுகளையும், இணைக்கும் ஒரு பாலமாக விளங்குகிறது. ஹானலூலூவில் உள்ள கிழக்கு — மேற்கு மையம் (East-West Centre). இம் மையம் நடத்திய மக்கள் தொகை தொடர்பான பட்டறையில் கலந்து கொள்ளவே நான் ஹவாய் சென்றிருந்தேன். ஆசிய நாடுகள் மற்றும் பஸிஃபிக் நாடுகள் சம்பந்தப்பட்ட ஆராய்ச்சிகள் செய்வதற்கு வேண்டிய வசதிகள் இங்கு உள்ளன. இந்த மையத்திலும், ஹவாய் பல்கலைக் கழகத்திலும் ஏராளமான இந்திய மாணவர்கள் உள்ளனர். கிழக்கு — மேற்கு மையத்தைச் சேர்ந்த ஹாலேமனோவா ஹாஸ்டலில், வாரத்துக்கு ஒருமுறை இந்தி படம் திரையிடப்படுகிறது. காசிக்குப் போனாலும் கர்மம் தொலையாது என்பது போல், அங்கு போயும் தேவானந்த் — ஹேமமாலினி டூயட்டையும், பிரான் ஷத்ருகன் சின்ஹா 'டிஷூம், டிஷூம்' சண்டைகளையும் பார்த்துக் கொண்டிருந்தேன். இப் படங்களை அமெரிக்க மாணவர்கள் கூட மொழி புரியாவிட்டாலும், கொஞ்ச நேரம் வேடிக்கை பார்க்கிறார்கள், குறிப்பாக டூயட் காட்சிகளை!

பல்கலைக் கழகத்திலிருந்து நடக்கும் தொலைவில், சென்னையைச் சேர்ந்த லட்சுமி அம்மாள் Madras Curry என்று ஒரு கடை வைத்திருக்கிறார்கள். இந்திய சமையலுக்கு வேண்டிய சாமான்கள் விற்பதோடு, நாலு டாலருக்கு சப்பாத்தி, சாதம், குருமா, சோலே எல்லாமாக ரெடிமேட் சாப்பாடு வேறு விற்பனை செய்கிறார். காரசாரமான இந்த இந்திய உணவை அமெரிக்கர்களும் ரசித்துச் சாப்பிடுகிறார்கள். சென்னையில் பள்ளிக்கூட ஆசிரியையாகப் பணிபுரிந்த லட்சுமி அம்மாள், தன் குடும்பத்துடன் ஹவாயில் குடியிருக்கிறார். இக் கடையில் இவருக்கு உதவியாக இருக்கும் இவருடைய அமெரிக்க மாப்பிள்ளை இவரை அன்புடன் 'அம்மா' என்று அழைக்கிறார்!

அலோஹா!

— ரமாமணி சுந்தர்

# முதலாளியம்மா

பண்ணையாரின் அடக்குமுறைகளுக்கு எதிராகப் பண்ணையாள் போராடுவதைப் பல காலம் பார்த்துப் பார்த்து அலுத்து விட்ட கண்களுக்கு முதலாளியம்மாவும் அவள் வேலைக்காரியின் மகளும் மோதுவது மாறுதலான சுவை.

தொடக்கத்தில், பாத்திர அறிமுக நிகழ்ச்சிகளில் சற்று நிதானம் உணர்ந்தாலும் பிரமீளாவும், கனகாவும் நேருக்கு நேர் சந்தித்து சவாலும் எதிர்சவாலும் விடுவதிலிருந்து சூடும் சுறுசுறுப்பும் பிறந்து விடுகிறது.

படிப்படியாக அவர்களிடையே மோதல் வளர்கிறது. பஞ்சாயத்துத் தேர்தலில் தான் வெற்றி பெற்றால் பண்ணையார் மகனுக்குக் கழுத்தை நீட்டி, மாலையும் கழுத்துமாக அவனை வேலைக்காரியான தன் தாயாரின் கால்களில் விழ வைப்பதாகவும், தோற்று விட்டால் ஊரை விட்டே ஓடிப் போய் விடுவதாகவும் கனகா சூளுரைக்க —

தன்னுடைய வெற்றியில் அளவிட முடியாத நம்பிக்கை கொண்டிருக்கும் பிரமீளா அதற்குச் சம்மதித்துப் பத்திரமொன்றில் கையெழுத்திட்டுத் தர —

சூளுரைத்தது போலவே கனகா ஜெயித்துப் பண்ணையாரின் மகனுக்காக மாலையும் கழுத்துமாக மணமேடையில் காத்திருந்து, வந்து அமரும் 'பண்ணையார் மகனை'ப் பார்த்து அதிர்ந்து போவது வலுவான திருப்புமுனை.

இடைவேளைக்குப் பிறகு வரும் முதல் காட்சியில் கதாநாயகனை அறிமுகப்படுத்தும் துணிச்சல் இதுவரை யாருக்கும் இருந்ததாகத் தெரியவில்லை.

இயக்குனர் சுகநாதனுக்கு இருக்கிறது!

பணக்கார மிடுக்கை வெளிப்படுத்தும் பண்பட்ட நடிப்பு பிரமீளாவின் ப்ளஸ் பாயிண்ட் என்றால், இளமைத் துடிப்பும் ஆற்றல் நிறைந்த கண்களும் கனகாவின் ப்ளஸ் பாயிண்ட்கள்.

இவர்களுடைய மோதல்களுக்கிடையே கிடந்து தவிக்கும் மனோரமாவிடம் நிறையவே நன்றியுணர்வு. உப்பிட்டவரை உச்ச கட்டம் வரை மறக்க மறுக்கிறார். குற்றால அருவியாகக் கண்ணீர் சிந்துகிறார். ஊர்ப் பஞ்சாயத்தின் முன்னே தன் கணவனை முதலாளியம்மா கைநீட்டி அடித்தவுடன் பொங்கியெழுந்து சீறும் போது 'கண்ணகி' படக் கண்ணாம்பாவை நினைவுக்குக் கொண்டு வருகிறார்.

எம். ஆர். ராதாவின் பாணிக்கு மற்றொரு வாரிசு — முதலாளியம்மாவின் மகனாக வரும் வாசு விக்ரம். (மூன்றாவது தலைமுறை?)

வாதப் பிரதிவாதங்கள் சமயங்களில் சற்று நீண்டு போய்த் தொய்வைத் தோற்றுவித்தாலும் —

காதல் காட்சிகளுக்கு வாய்ப்பில்லாமல் போய் அதனைச் சரிக்கட்டக் கனவுக் காட்சிகள் அங்கங்கே ஊடுருவினாலும் —

தேவையில்லாத 'ஆள் மயக்கி' ஆட்டம் அலட்டலாக இடைச் செருகினாலும் —

தன் மீது அபாண்டமாகப் பழி சுமத்தப்படும் போது, வாசு விக்ரம் தன் கையைப் பிடித்து இழுத்தால் குற்றத்தை ஏற்பதாகக் கூறி, அருகே நெருங்கும் அவரைப் பழி வாங்கும் வெற்றிக் களிப்புடன் கனகா கத்தியால் குத்தி விடும் எதிர்பாரா முடிவு —

எல்லாவற்றையுமே ஈடுகட்டி விடுகிறது.

— சி. ஆர். கே.



# பொன்னியின் செல்வன்





அத்தியாயம் 75

## விபரீத விளைவுகள்

தஞ்சைபுரி அரண்மனையின் அந்தரங்க மந்திராலோசனை மண்டபத்தில் பராந்தகசுந்தர சோழ சக்கரவர்த்தி தர்ம சிங்காதனத்தில் வீற்றிருந்தார்.

அரண்மனைப் பெண்டிர்களில் முக்கியமானவர்கள் அவருக்கு இருமருங்கிலும் அமர்ந்திருந்தார்கள்.

சோழ நாட்டு அமைச்சர்களும் தளபதிகளும் அரசிளங் குமாரர்களும் சக்கரவர்த்தியின் முன்னிலையில் வணக்கமான பாவனையில் நின்று கொண்டிருந்தார்கள்.

பெண்டிர்களிலே மூத்த எம்பிராட்டியான செம்பியன்மாதேவியும், உடைய பிராட்டி வானமாதேவியும், இளைய பிராட்டி குந்தவையும், கொடும்பாளூர் இளவரசி வானதியும் காணப்பட்டனர். அவர்களுடன் கலந்து நிற்பதற்குத் தயங்கிய பூங்குழலியும் சற்றுத் தூரத்தில் காணப்பட்டாள்.

ஆடவர்களிலே பெரிய பழுவேட்டரையரும், சின்னப் பழுவேட்டரையரும், முதன் மந்திரி அநிருத்தரும், சேநாதிபதி பெரிய வேளாரும், மிலாடுடையார் மலையமானும், இளவரசர் அருள்மொழிவர்மரும், புனர் ஜன்மம் பெற்ற மதுராந்தகத் தேவரும், பார்த்திபேந்திரப் பல்லவனும், முதன் மந்திரிக்குப் பின்னால் சற்று ஒதுங்கித் திருமலையும் இருந்தனர்.

சக்கரவர்த்தி சபையில் கூடியிருந்தவர்களைக் கண்ணோட்டமாகப் பார்த்துவிட்டு, ''அழைத்தவர்கள் எல்லாரும் வந்திருக்கிறார்களா? கடம்பூர் மன்னரைக் காணோமே?'' என்றார்.

''சம்புவரையரின் மகன் இப்போதுதான் திரும்பி வந்தான். தந்தையும் மகனும் விரைவில் இங்கு வந்து சேருவார்கள்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஓ! கந்தமாறன் திரும்பி வந்து விட்டானா? என்ன செய்தி கொண்டு வந்தான்? தப்பி ஓடியவர்களைப் பிடித்துக் கொண்டு வந்து விட்டானா?'' என்று சுந்தர சோழர் வினவினார்.

''இல்லை, பிரபு! அவர்களைப் பிடிக்க முடியவில்லை. ஆனால் வந்தியத்தேவனைக் கொன்று விட்டதாகச் சொல்லுகிறான். இன்னொரு பைத்தியக்காரன் அகப்படவில்லையாம்! தப்பிப் போய் விட்டானாம்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

பெரிய பழுவேட்டரையர் இப்போது ஒரு ஹுங்காரம் செய்தார். அவர் ஏதோ சொல்லப் போகிறார் என்று மற்றவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர் ஒன்றும் சொல்லவில்லை.

சக்கரவர்த்தி, ''நான் செய்த தவறினால்

அமரர் கல்கி

இன்னும் என்னென்ன விளைவுகள் நேருமோ, தெரியவில்லை! முதன் மந்திரி! என் மனத்தில் உள்ள எண்ணங்களை நீர் நன்கு அறிந்திருக்கிறீர். எனக்கும் என் குலத்துக்கும் மிகவும் வேண்டியவர்களை இங்கே இப்போது அழைத்திருக்கிறேன். எதற்காக அழைத்தேன் என்பதையும், என் கருத்தையும் நீர்தான் இவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். என்னைக் காட்டிலும் தெளிவாக உம்மால் சொல்ல முடியும் அல்லவா?'' என்றார்.

''ஆக்ஞை, சக்கரவர்த்தி!'' என்று முதல் அமைச்சர் கூறி விட்டுச் சபையோரைப் பார்த்துச் சொன்னார்:—

''பல காரணங்களினால், சக்கரவர்த்தியின் உள்ளம் புண்பட்டிருப்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். அபிமன்யுவையும் அரவானையும் ஒத்த வீராதி வீரனான மூத்த மகனைச் சமீபத்தில் நம் மன்னர் பறிகொடுக்க நேர்ந்தது. இளவரசர் இறந்த காரணமோ இன்னமும் மர்மமாக இருந்து வருகிறது. மூன்று ஆண்டு காலமாக அந்த வீரத் திருமகனை நம் அரசர் பார்க்கவில்லை. காஞ்சியில் பொன் மாளிகை கட்டி விட்டுத் தந்தையை அங்கே வந்து தங்கியிருக்க வேண்டும் என்று கரிகாலர் செய்திக்கு மேல் செய்தி விடுத்தார். ஆயினும் சக்கரவர்த்தி போகவில்லை. அதன் காரணம் நீங்கள் எல்லாரும் அறிந்ததே. இந்தத் தஞ்சை மாநகரில் சக்கரவர்த்தி சின்னப் பழுவேட்டரையரின் பாதுகாப்பில் இருந்து வந்தார். நாடு நகரங்களில் பலவித வதந்திகள் உலாவி வந்தன. அத்தகைய சந்தர்ப்பத்தில் சக்கரவர்த்தி தஞ்சையை விட்டுச் சென்றால், பழுவேட்டரையர்களிடம் அவருக்கு நம்பிக்கை குன்றி விட்டதாக யாரேனும் எண்ணக் கூடும் அல்லவா? அத்தகைய எண்ணத்துக்கு இடங்கொடுக்கச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. நம் அரசர் சொல்வதற்குத் தயங்கக்கூடிய ஒரு செய்தியை நான் வெளிப்படையாகச் சொல்கிறேன். அதற்காக, இங்கே கூடியுள்ள மன்னர்குலத் தலைவர்கள் என்னை மன்னிக்க வேண்டும். நம் அரசர் கோமான் சில காலமாக உடல் நோயுற்றுக் கால்களின் சக்தியை இழந்திருந்தார். அதனால் அவர் உள்ளம் நலிவுற்றிருந்தது. ஆனால் அதைக் காட்டிலும் அதிகமாக அவர் உள்ளத்தைப் புண்படுத்திய மனநோய் ஒன்று இருந்தது. சோழர் பெருங்குலத்துக்கு உற்ற துணைவர்களாயும், பரம்பரையாக அக் குலத்துடன் உறவு பூண்டவர்களாயும், இந்தப் பெரிய சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கும் வைரத் தூண்களாயும் இருந்த நீங்கள் ஒருவரோடொருவர் வேற்றுமைப்பட்டுப் பகைமை பூண்டிருந்தது நம் சக்கரவர்த்தியின் உள்ளத்தைப் புண்படுத்தி உடல்நோயையும் வளர்த்து வந்தது. யானை மேல் துஞ்சி வீர சொர்க்கம் அடைந்த இராஜாதித்தரின் தலைமையில் நீங்கள் அனைவரும் ஒருமுகமாகத் தக்கோலப் போர்க்களத்தில் சண்டையிட்டீர்கள். அந்தப் போர்க்களத்தில், இராஜாதித்தர் எதிர்பாராத வீர மரணம் அடைந்தபடியால் சோழ சைன்யம் தோல்வியுற்றது. ஆனால் உங்களுடைய வீரத்தினாலும் உறுதியினாலும் ஒற்றுமையினாலும், இழந்த தொண்டை மண்டலத்தையும் கங்க மண்டலத்தையும் திரும்பக் கைப்பற்றினீர்கள். சேவூர்ப் போர்க்களத்தில் பாண்டியர்களை முறியடித்துப் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி நமது நேர் ஆளுகைக்குள் கொண்டு வந்தீர்கள். ஈழ நாட்டில் மகிந்தனைப் புறங்கண்டு புலிக் கொடியை உயர்த்தினீர்கள். இவ்வளவு அரும் பெரும் காரியங்களை, நீங்கள் அனைவரும் ஒருமைப்பட்டுச் சோழ சாம்ராஜ்யத்தின் நலமே உங்கள் நலம் என்று கருதி வந்ததினாலே சாதிக்க முடிந்தது.

''அத்தகைய நன்னிலைமை சில ஆண்டுகளாக மாறி விட்டது. எக் காரணத்தினாலோ உங்களுக்குள் மன வேற்றுமை ஏற்பட்டு விட்டது. இரண்டு கட்சியாகப் பிரிந்து விட்டீர்கள். இந்தப் பிளவை நீக்க வேண்டும் என்று நம் அரசர் பெருமான் எவ்வளவோ பாடுபட்டார். தமக்குப் பிறகு அரசுரிமை யாருக்கு என்பது பற்றித்தான் உங்களுக்குள் வேற்றுமை என்பதை அறிந்தார். நீங்கள் யாரும் அதை நேர்முகமாகச் சக்கரவர்த்தியிடம் சொல்லவில்லை. ஆனாலும் இணையற்ற அறிவாளியான நம் பேரரசர் அதை ஊகித்து அறிந்தார். அரசுரிமை விஷயத்தை உங்கள் எல்லாருடனும் கலந்து மனம் விட்டுப் பேசிச் சமரசமாகத் தீர்த்து வைக்க விரும்பினார். அவ்விதம் அதைத் தீர்த்து வைத்த பின்னரே காஞ்சிக்குச் செல்வது என்று எண்ணியிருந்தார். சிவஞான கண்டராதித்தப் பெருமானின் திருக்குமாரருக்கே இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை உரிமையாக்க எண்ணியிருந்தார். இதை ஆதித்த கரிகாலரையும் ஒப்புக் கொள்ளச் செய்யலாம் என்று நம்பியிருந்தார். அதற்காகவே கரிகாலரை இங்கு வரும்படி சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தார். அதற்கிடையில் எதிர்பாராத துயர சம்பவம் நிகழ்ந்து விட்டது. கரிகாலர் கடம்பூர் மன்னரின் மாளிகைக்கு வருகிறார் என்று அறிந்த போது சக்கரவர்த்தி மனம் பூரித்தார். இதன் மூலம் உங்களுக்குள் ஏற்பட்டிருந்த வேற்றுமை நீங்கி விடும் என்று எண்ணினார். கரிகாலர் சம்புவரையரின் திருக்குமாரியை மணந்து கொண்டால் முன் போல் நீங்கள் அனைவரும் ஒருமனப்படுவீர்

கள் என்றும் இராஜ்ய உரிமை விஷயத்தையும் சுலபமாகத் தீர்த்துக் கொள்ளலாம் என்றும் எண்ணினார். நானும் அவ்விதமே நினைத்தேன். உங்களில் பலரும் அவ்விதமே எண்ணியிருப்பீர்கள். நம் திருக்கோவலூர் மன்னர் கூட அதனாலேதான் ஆதித்த கரிகாலர் கடம்பூர் செல்வதற்குத் தடை சொல்லவில்லை. ஆனால் நம் எல்லாருடைய ஆசையும் பங்கம் உற்றது. கடம்பூர் அரண்மனையில் இளவரசர் கரிகாலர் அகால மரணம் அடைந்தார்....''

''அது எப்படி நேர்ந்தது என்பதைக் கண்டறியப் போகிறோமா, இல்லையா? இதைத் தெரிந்து கொண்டு மேலே நீங்கள் பேசுவது உசிதமாயிருக்கும்'' என்றார் திருக்கோவலூர் மலையமான்.

''ஆமாம்; அதைத் தெரிந்து கொள்ளாமல் மேலே எந்த யோசனையும் செய்வது சாத்தியமில்லை!'' என்றார் சேநாதிபதி.

''வீரப் பெருமக்களே! நடந்தது நடந்து விட்டது. போனதைப் பற்றிக் கிளறிக் கொண்டிருக்க வேண்டாம் என்று சக்கரவர்த்தி கருதுகிறார்!'' என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

''அது எப்படி முறையாகும்? சோழ குலத்தின் நீதி பரிபாலனம் உலகப் பிரசித்தியானது. இந்த ராஜ்யத்தில் ஒரு திக்கற்ற அனாதை உயிரிழந்தாலும் அது எப்படி நேர்ந்தது என்று விசாரிக்கப்படுகிறது. அதற்கு யாராவது காரணம் என்று ஏற்பட்ட பின் தக்க தண்டனை விதிக்கப்படுகிறது. அப்படியிருக்க, பட்டத்து இளவரசர் என்று முடிசூடிய இளங்கோவின் அகால மரணத்தை எவ்வாறு விசாரிக்காமல் விடுவது?'' என்றார் சேநாதிபதி பெரிய வேளார்.

சுந்தர சோழர் பெருமூச்சு விட்டு, ''கொடும்பாளூர் மாமா! கேளுங்கள்! என் அருமை மகன் அகால மரணம் அடைந்ததில் என்னை விடத் துயரம் வேறு யாருக்காவது இருக்க முடியுமா? நானே விசாரணை வேண்டாம் என்கிறேன். ஏன்? இங்குள்ள யாரும் அதற்குப் பொறுப்பாளி அல்ல என்று நிச்சயமாக அறிந்துள்ளேன். நான் செய்த பாவத்தின் பயனாக என் மகனைப் பறிகொடுத்தேன். அதற்குப் பிராயச்சித்தம் என்ன உண்டோ சொல்லுங்கள்! செய்து விடுகிறேன். வேறு காரணம் தேட வேண்டாம்!'' என்றார்.

''பிரபு! தாங்கள் இப்படிச் சொல்லுவதினால், குற்றத்துக்குப் பொறுப்பாளியான யாரையோ காப்பாற்ற விரும்புகிறீர்கள் என்று ஏற்படும். நாட்டு மக்கள் ஏற்கெனவே இளவரசரது மரணத்தின் காரணம் பற்றிப் பலவாறு பேசிக் கொள்கிறார்கள். உண்மையைக் கண்டுபிடித்து வெட்ட வெளிச்சமாக்கி விடுவதுதான் நல்லது. குற்றவாளி யாராயிருந்தாலும் உரிய தண்டனைக்கு ஆளாக வேண்டியதுதான்!'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''நூற்றில் ஒரு வார்த்தை! அதுதான் நேர்மையான இராஜரீக முறை. இந்தப் பெருங் குற்றத்தை விசாரித்துத் தண்டியாவிட்டால், நாட்டு மக்களுக்கு நீதிபரிபாலனத்திலேயே நம்பிக்கை குன்றிப் போய்விடும்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''பெரியோர்களே! இதைப் பற்றி ஏன் இவ்வளவு யோசனையும் வாதப்பிரதிவாதமும்? இந்தச் சிறுவன் கூறுவது அதிகப் பிரசங்கமாக இருந்தால் மன்னித்து அருளுங்கள். குற்றவாளி தண்டிக்கப்பட்டு விட்டான்! இளவரசர் கரிகாலனைக் கொன்றவனும் என் சகோதரியின் வாழ்க்கையைப் பாழாக்கி அவளைப் பைத்தியமாக அடித்தவனுமான பாதகன் வந்தியத்தேவனை நான் என் கை வேலால் கொன்று விட்டுத் திரும்பினேன். இன்னும் என்னத்திற்கு விசாரணை?'' என்றான் கந்தமாறன்.

முதன் மந்திரி முதலில் பேசிக் கொண்டிருந்தபோதே கந்தமாறன் அங்கே வந்து விட்டான். அவன் வந்திருந்ததை அவன் குரலைக் கேட்ட பிறகுதான் மற்றவர்கள் கவனித்தார்கள்.

அவர்களில் பெரிய பழுவேட்டரையர் மெல்லிய குரலில், ''மூடன்! நிர்மூடன்! கடம்பூர் சம்புவரையருக்கு இப்படிப்பட்ட பிள்ளை வந்து பிறந்தானே!'' என்று முணுமுணுத்தார்.

முதன் மந்திரி அநிருத்தர் ''கந்தமாறா! வந்தியத்தேவனை நீ வேல் எறிந்து கொன்றது உண்மைதானா? அவனை நீ பார்த்தாயா? இரவு நேரத்தில் அல்லவா அவனை நீ துரத்திச் சென்றாய்?'' என்றார்.

''முதன் மந்திரி! உங்களுக்கு என்பேரில் எப்போதும் நம்பிக்கை இல்லையென்பதை அறிவேன். இரவாக இருந்ததினால் ஆளைத் தெரியாமல் போகுமா?''

''அவனும் வீரனாயிற்றே! உன்னுடன் சண்டை போடவில்லையா?''





''ஆமாம், என்னுடைய வீரத்திலும் தங்களுக்கு நம்பிக்கை கிடையாதுதான். ஆகையால் சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்துக் கொள்கிறேன். ஓடியவர்கள் இரண்டு பேர். ஒருவன் சில வருஷங்களாக நம் பாதாளச் சிறையிலிருந்த பைத்தியக்காரன். அவன் என்னைத் தடுக்க யத்தனித்த போது இன்னொருவன் ஆற்றின் அக்கரையை நெருங்கிக் கொண்டிருந்தான். வேல் எறிந்து அவனைக் கொன்றேன். அவன் வாணர்குலத்து வந்தியத்தேவனாகவே இருக்க வேண்டும்...''

''இறந்து போனவனுடைய உடலை நீ உன்னுடன் எடுத்து வரவில்லையா?''

''நீர் இப்படிச் சந்தேகிப்பீர் என்று தெரிந்திருந்தால் வடவாற்று வெள்ளத்தில் இன்னும் கொஞ்ச தூரம் தேடிப் போயிருப்பேன். ஆனால் இந்த மந்திராலோசனை சபைக்கு வந்திருக்க முடியாது!'' என்றான் கந்தமாறன்.

''ஆமாம்; நீ வராமலிருந்தால் பெருநஷ்டமாகியிருக்கும்!'' என்றார் தளபதி





சின்னப் பழுவேட்டரையர்.

"தம்பி! வந்தியத்தேவனைத் தேடிப் பிடிப்பதில் உனக்கு என்ன அவ்வளவு சிரத்தை?" என்று பெரிய வேளார் பூதி விக்கிரம கேசரி கேட்டார்.

"இதைக் கேட்கவும் வேண்டுமா? என்னுடைய வீட்டில் அந்தத் துயரச் சம்பவம் நிகழ்ந்தது. உண்மைக் குற்றவாளி அகப்படாவிட்டால், என்பேரிலும் என் தந்தையின் பேரிலும் நீங்கள் சந்தேகப்பட மாட்டீர்களா?"

சுந்தர சோழர் தலையிட்டு, "பிள்ளாய்! கந்தமாறா! அப்படியெல்லாம் வேறு யார் சந்தேகப்பட்டாலும் நான் சந்தேகப்பட மாட்டேன். உன் தந்தைக்கு என்னிடமுள்ள பக்தி விசுவாசத்தை நான் அறியேனா? போகட்டும்! பெரிய சம்புவரையர் எங்கே?" என்றார்.

"சக்கரவர்த்தி! எங்கள் குடும்பத்தின் அவமானத்தை நானே சொல்லிக் கொள்ள வேண்டியிருக்கிறது. நான் வந்தியத்தேவனைக் கொன்றுவிட்டுத் திரும்பியதாக என் தந்தையிடம் சொல்லிக் கொஞ்டிருந்தேன். அதை என் தங்கை மணிமேகலை கேட்டுக் கொண்டிருந்தாள். நான் கூறியதைக் கேட்டதும் அவள் என்னையே கத்தியால் குத்திக் கொல்ல வந்து விட்டாள். அவளைச் சாந்தப்படுத்தி, அவளுடைய வெறியைத் தணிக்க என் தந்தை முயன்று கொண்டிருக்கிறார். விரைவில் வந்து விடுவார். இந்த மந்திராலோசனை சபையில் என்ன முடிவாகிறதோ, அதைத் தாமும் ஏற்றுக் கொள்வதாக என்னிடம் சொல்லி அனுப்பினார்!" என்றான் கந்தமாறன்.



"அப்பனே! உன் சகோதரி முன்னமேயே 'இளவரசரை நான்தான் கொன்றேன்!' என்று பித்துப் பிடித்தவள் போலச் சொல்லிக் கொண்டிருந்தாள் அல்லவா?" என்றார் கிழவர் மலையமான்.

"ஆம், ஆம்! வந்தியத்தேவன் செய்த குற்றத்தை மறைத்து அவனைத் தப்புவிப்பதற்காகவே அவ்வாறு அவள் சொன்னாள். அப்போது அவள் முழுப் பைத்தியமாகியிருக்கவில்லை. இப்போது பைத்தியம் முற்றிப் போயிருக்கிறது. எங்கள் குலத்தின் துரதிர்ஷ்டம்!" என்றான் கந்தமாறன்.

"இளஞ் சம்புவரையரே! வந்தியத்தேவர்தான் இளவரசர் கரிகாலரைக் கொன்றதாக அவ்வளவு தீர்மானமாய்ச் சொல்கிறீரே? அது எப்படி? நீரே உம் கண்ணால் பார்த்தீரா? அல்லது பார்த்தவர்கள் யாரேனும் சொன்னார்களா?" என்று முதன் மந்திரி கேட்டார்.

"அமைச்சர் ஐயா! கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா? இளவரசர் இறந்து கிடந்த இடத்தில் அந்த வாணர்குல வீரன் தான் இருந்தான். அவன் முகத்தைப் பார்த்தாலே குற்றவாளி என்று எழுதி ஒட்டியிருந்தது போல் தெரிந்தது. அதுவோ பழுவூர் இளையராணியின் அந்தப்புரம். அங்கே இவன் வேறு எதற்காகப் போனான்? குற்றவாளியில்லாவிட்டால், பாதாளச் சிறையிலிருந்து ஏன் தப்பித்து ஓடியிருக்க வேண்டும்?" என்றான் கந்தமாறன்.

"பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடியவனைப் பிடித்துக் கொண்டு வந்து ஒப்புவிக்கும் பொறுப்பை முதன் மந்திரி ஏற்றுக் கொண்டார். அதை இந்தச் சமயத்தில் ஞாபகப்படுத்துகிறேன்" என்றான் பார்த்திபேந்திரன்.

"பல்லவர் குலக் கோமகனே! நான் அவ்வாறு ஏற்றுக் கொண்டது உண்மைதான். ஆனால் இளஞ் சம்புவரையர் இவ்விதம் தாமே நீதிபதியாகி விசாரித்து முடிவு செய்து தண்டனையையும் நிறைவேற்றி விடுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. வந்தியத்தேவரும் பழமையான வாணர்குலத்தில் தோன்றியவர். இவருடைய மூதாதையர் ஒரு சமயம் பெரிய இராஜ்யத்தையே ஆண்டார்கள். சோழர் குலத்துக்குப் பெண் கொடுத்து உறவு பூண்டார்கள். குறுநில மன்னர் குலத்தில் வந்தவர்கள் மீது குற்றம் ஏற்பட்டால், சக்கரவர்த்தியே தர்மாசனத்தில் வீற்றிருந்து விசாரித்து முடிவு செய்வதுதான் மரபு!" என்றார் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர்.

"ஐயா! சிறையிலிருந்து தப்பி ஓடியவனை உயிருள்ளவனாகப் பிடித்து வரலாம்; அல்லது உயிரற்றவனாகவும் பிடித்து வரலாம்-என்பதும் மரபுதான்!" என்றான் பல்லவர் குல வீரன் பார்த்திபேந்திரன்.

"வந்தியத்தேவனை உயிரற்றவனாகவும் இளஞ் சம்புவரையர் கொண்டு வரவில்லையே? வடவாற்று வெள்ளத்தில் விட்டு விட்டல்லவா வந்து விட்டார்?" என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.



ச் சமயத்தில் பெரிய சம்புவரையர் அந்த மந்திராலோசனை மண்டபத்தில் பிரவேசிக்கவே எல்லாருடைய கண்களும் அவர்பால் திரும்பின. அவர் முகத்தில் குடிகொண்டிருந்த வேதனையை அனைவரும் கவனித்தார்கள்.

கந்தமாறன் அவர் அருகில் சென்று மெல்லிய குரலில், "மணிமேகலை எப்படி இருக்கிறாள்?" என்று கேட்டான்.

சம்புவரையர் "அப்படியேதான் இருக்கிறாள். உன் அன்னையை அவளுக்குக் காவல் வைத்து விட்டு வந்தேன்!" என்று உரத்த குரலில், சற்றுக் கடுமையாகவே கூறினார்.

சக்கரவர்த்தி சம்புவரையரைப் பார்த்து, "ஐயா! தாங்கள் தங்கள் செல்வக் குமாரியின் அருகில் இருப்பது அவசியமானால் அவ்வாறே செய்யலாம். நம்முடைய ஆலோசனையை நாளை வைத்துக் கொள்ளலாம்!" என்றார்.

"இல்லை, பிரபுவே! அவள் அருகில் நான் இருந்து பயன் ஒன்றுமில்லை. என் குமாரன் கை வேலினால் உயிர் துறந்த வாணர்குல வீரன் வந்தியத்தேவன் மீண்டும் உயிர் பெற்று வந்தால் ஒருவேளை பயன்படலாம்!" என்றார் சம்புவரையர்.

அவர் பேச்சில் தொனித்த வேதனை நிறைந்த துயரமும் மனக் கசப்பும் அந்தச் சபையில் சிறிது நேரம் மௌனம் குடிகொள்ளும்படி செய்தது.

முதன் மந்திரி அநிருத்தர், "ஐயா! தங்கள் மாளிகையில் நடந்த விபரீதச் சம்பவத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். இளவரசர் தங்கள் மாளிகையில் அகால மரணம் அடைய நேர்ந்ததினால் தங்கள் உள்ளம் எவ்வளவு புண்பட்டிருக்கிறது என்பதை நாங்கள் எல்லாரும் உணர்ந்திருக்கிறோம். அதற்குத் தங்களை எந்தவிதத்திலும் பொறுப்பாக்கச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. ஆனாலும் நாடு நகரங்களில் நானாவிதமான வதந்திகள் பரவாமலிருக்கும் பொருட்டு, இளவரசனின் மரணம் எவ்விதம் நேர்ந்தது என்று நிச்சயமாகத் தெரிந்தால் நல்லது அல்லவா? இந்தச் சபையில் கூடியுள்ளவர்கள் அவ்வாறு கருதுகிறார்கள். அதைப் பற்றித் தாங்கள் ஏதாவது தெரியப்படுத்துவதற்கு இருக்கிறதா? வாணர் குலத்து வந்தியத்தேவனால்தான் இளவரசரின் மரணம் நேர்ந்தது என்று இளஞ்சம்புவரை

யர் சாதிக்கிறார். தங்களுடைய கருத்து என்ன?'' என்று கேட்டார்.

சம்புவரையர் சிறிது நேரம் திகைத்து நின்றார். பின்னர் நாலாபுறமும் பார்த்தார். அவருடைய பார்வை கந்தமாறன் பேரில் விழுந்ததும், ''ஆம், ஆம்! இந்த மூடன் அவ்வாறுதான் அன்றைக்கும் சொன்னான். அதை நான் நம்பவில்லை. இன்றும் நம்பவில்லை. இவன் வார்த்தையைக் கேட்டு இளவரசர் கரிகாலரைக் கடம்பூர் மாளிகைக்கு வரும்படி அழைத்தேன். அதனால் இத்தனை விபரீத விளைவுகள் நேர்ந்து விட்டன. எனக்கும் என் குலத்துக்கும் என்றும் அழியாத அபகீர்த்தி ஏற்பட்டு விட்டது!'' என்றார்.

கிழவர் மலையமான் இரங்கிய குரலில், ''சம்புவரையரே! பதற வேண்டாம்! நடந்தது நடந்து விட்டது! நல்ல எண்ணத்துடனே தான் தாங்கள் என் பேரப் பிள்ளையைத் தங்கள் மாளிகைக்கு அழைத்தீர்கள். கரிகாலனுடைய மரணத்துக்குத் தங்களைப் பொறுப்பாக்க இங்கே யாரும் எண்ணவில்லை. ஆகையினால்தான் உண்மையை அறிய விரும்புகிறோம்! அதற்குத் தாங்கள் உதவி செய்தால் நலமாயிருக்கும்!'' என்றார்.

''நான் என்ன உதவி செய்ய முடியும்? என் மகன் ஒன்று சொல்லுகிறான்; அதற்கு நேர்மாறாக என் மகள் இன்னொன்று சொல்லுகிறாள். இருவர் பேச்சையும் என்னால் நம்ப முடியவில்லை. எனக்கும் உண்மை தெரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டது போல் இருக்கிறது. உண்மையில் நடந்ததை அறிவதற்கு என்னைக் காட்டிலும் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையர் உதவி செய்யக்கூடும். அவரைக் கேளுங்கள்! அவர்தான் எல்லாவற்றுக்கும் மூல காரணம். அவர்தான் முதன் முதலில் மதுராந்தகத்தேவரை இரகசியமாகக் கடம்பூருக்கு அழைத்து வந்தார். என் மகளை அவருக்கு மணம் செய்து கொடுக்கும்படியும் சொன்னார். அதிலிருந்து என் குடும்பத்துக்குச் சனியன் பிடித்தது. அந்த மதுராந்தகத் தேவரே இப்போது மாயமாய் மறைந்து விட்டதாக அறிகிறேன்! பின்னர், பெரிய பழுவேட்டரையர் தமது இளைய ராணியை அழைத்துக் கொண்டு வந்தார். காஞ்சியிலிருந்து இளவரசரையும் வரப் பண்ணினார். இரண்டு பேரையும் என் மாளிகையில் விட்டு விட்டுப் போய்விட்டார். ஏன் போனார் என்று கேளுங்கள், அவருடைய இளைய ராணி இப்போது எங்கே போனார் என்று கேளுங்கள்...!''



வ்விதம் சம்புவரையர் வெறி கொண்டவர் போல எதையெல்லாமோ பேசிக் கொண்டே போனார்.

சக்கரவர்த்தி குறுக்கிட்டு, ''போதும்! போதும்! நிறுத்துங்கள்! இதனாலேதான் நடந்துவிட்ட காரியத்தைப் பற்றி விசாரணை ஒன்றும் வேண்

# கல்கி தொழில் மலர் - '90

* கல்கியின் தொழில் மலர் — படிக்கப் படிக்க அடேங்கப்பா... 'தொழில்துறை பற்றி எவ்வளவு செய்திகள்! வியந்து போனேன்! புதிய தொழில் முறைகள் பற்றியும் தெரிந்து கொள்ள முடிந்தது. கூடவே சிறுகதைகள், தொழிலதிபர்கள் வளர்ந்தது பற்றிய கட்டுரைகள், துணுக்குகள், ஜோக்குகள் என்று பத்தே ரூபாயில் அசத்திதான் விட்டீர்கள், போங்கள்!

கும்பகோணம். ரவிகணேஷ்.

* இருநூற்று நாற்பது பக்கங்களில் இரண்டாயிரத்து நானூறுக்கும் மேற்பட்ட செய்திகளைப் பல வண்ணப்படங்களுடன் தந்துவிட்ட தொழில் மலருக்கு வாழ்த்துக்கள்! சிரத்தையோடு பாடுபட்டுத் தயாரித்த மலர்க் குழுவினருக்குப் பாராட்டுக்கள்!

வைத்தங்கரை. கவி. செங்குட்டுவன்.

* கல்கி தொழில் மலரில் என்னை மிகவும் கவர்ந்த கட்டுரை: ''சின்னதாகத் தொடங்குவோம்; உலகளாவ உயர்வோம்!'' அருமையான தலைப்பு; உன்னதமான முழக்கம். வணிகப் போட்டி கண்டு இத்தனை நாளும் பயந்து பயந்து தொழில் செய்து வரும் எனக்கு சுரேஷ் கிருஷ்ணா அவர்களின் கட்டுரை அறிவுக் களஞ்சியமாகத் தெரிகிறது; நம்பிக்கை பிறக்கிறது; எதையும் சாதிக்க முடியும் என்ற தைரியம் கிடைத்தது. நன்றி.

மங்களூர் (முகாம்). ஜி. சிதம்பரம்.

* தொழில் துறை, பொருளாதாரம் ஆகிய அம்சங்களில் மக்களுக்கு விழிப்புணர்ச்சி ஏற்பட வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில், மிகவும் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட கல்கி தொழில் மலர் புத்தகமல்ல; பொக்கிஷம்!

வெறும் பொழுதுபோக்கு மலர் அல்ல என்றாலும் படிக்கப் படிக்கச் சுவாரஸ்யமாக இருக்கிறது. படித்தவுடன் நாமும் இந்த உலகில் ஏதாவது சாதனை புரிய வேண்டும் என்ற ஒரு துடிப்பை ஏற்படுத்துகிறது.

முடிகண்டநல்லூர். க. ராஜேந்திரன்.



டாம் என்று நான் சொன்னேன். நீங்கள் கேட்கவில்லை. ஏற்கெனவே உங்களுக்குள்ளே இருக்கும் வேற்றுமை போதாதா? புதிய பூசல்கள் வேறு வேண்டுமா? சம்புவரையரே! உங்கள் மாளிகையில் நடந்ததற்கு நீங்கள் பொறுப்பாளியல்ல. அதனாலேதான் உங்களை உடனே பாதாளச் சிறையிலிருந்து விடுவிக்கச் சொன்னேன். என் வீரப் புதல்வன் அகால மரணம் அடைந்ததற்கு என்னுடைய பழைய பாவங்கள்தான் காரணம். யார் பேரிலும் குற்றம் இல்லை. நீங்கள் அதைப் பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம். பெரிய பழுவேட்டரையரும் எதுவும் சொல்ல வேண்டியதில்லை!'' என்றார்.

அப்போது பெரிய பழுவேட்டரையர் சிம்ம கர்ஜனையைப் போல் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பெருங்குரலில் பேசினார்: — ''சோழர்குலக் கோமானே! கருணை கூர்ந்து மன்னிக்க வேண்டும். நான் பேசாமலிருக்கலாகாது. என் மனத்தில் உள்ளதைக் கூறியே ஆகவேண்டும். உண்மையை நான் அறிந்தபடி சொல்லியே ஆக வேண்டும். ஆம், பெருமானே! உண்மையை எதற்காகச் சொல்ல வேண்டும் என்றும், சொல்லாமலே என் பிரதிக்ஞையை நிறைவேற்றி விடலாம் என்றும் எண்ணியதுண்டு. ஒரு காலத்தில் நான் நம் வேளைக்காரப் படைக்குத் தலைவனாயிருந்தேன். சோழர் குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஆபத்து வருங்காலத்தில் காப்பாற்ற முடியாவிட்டால், என் தலையை நானே வெட்டிக் கொண்டு உயிர் விடுவேன் என்று பிரதிக்ஞை செய்திருந்தேன். ஆதித்த கரிகாலரைக் காப்பாற்ற என்னால் முடியவில்லை. ஆகையால் என் பிரதிக்ஞையை நிறைவேற்றியே தீர வேண்டும். அதற்கு முன்னால் எனக்குத் தெரிந்த உண்மையைச் சொல்லிவிட விரும்புகிறேன். இல்லாவிட்டால் வீணான பலப்பல சந்தேகங்கள் ஏற்பட்டு வீண் பழிகள் சுமத்தப்பட ஏதுவாகும்!''



வ்வாறு பெரிய பழுவேட்டரையர் கூறி நிறுத்திய போது அந்தச் சபையில் பரிபூரண மௌனம் குடி கொண்டிருந்தது. எல்லாருடைய உள்ளமும் ஒரு கணம் கனிந்து உருகி விட்டது.

சக்கரவர்த்தி தழதழத்த குரலில், ''மாமா! சற்று யோசியுங்கள்! எதற்காகத் தாங்கள் நடந்துபோன காரியங்களைப் பற்றிப் பேச வேண்டும்? இறந்தவர்களின் உயிர் திரும்பி வரப் போவதில்லை. தாங்கள் மனமறிந்து சோழ குலத்துக்கு எந்தவிதத் துரோகமும் செய்திருக்கமாட்டீர்கள்! ஆகையால், நடந்து போனதை மறந்துவிட்டு இனி நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசுவோம்!'' என்றார்.

''இல்லை, ஐயா! நடந்து விட்டதைப் பற்றி நான் பேசியே ஆக வேண்டும். சோழர் குலத்துக்கு நான் எவ்வளவு பெரிய துரோகம் செய்வதற்கிருந்தேன் என்று கூறியே தீர வேண்டும். தங்களுக்கும்எனக்கும்குலதெய்வமான துர்க்காதேவிதான் அவ்விதம் நேராமல் தடுத்தாள். அந்த அன்னை பரமேசுவரிக்கு என் காணிக்கையைச் செலுத்தியே தீரவேண்டும்! கருணை கூர்ந்து நான் சொல்லப் போவதைச் செவி கொடுத்துக் கேளுங்கள்!'' என்றார் பெரிய பழுவேட்டரையர். அவர் பேசுவதைத் தடை செய்ய முடியாது என்று கண்ட சக்கரவர்த்தியும் சும்மா இருந்தார்.



ன்னர், பெரிய பழுவேட்டரையர் தாம் மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் சாலையோரத்தில் நந்தினியைச் சந்தித்து அவள் பேரில் மோகங் கொண்டது முதல் நடந்ததையெல்லாம் ஒன்றையும் மறைக்காமல் எடுத்துச் சொன்னார். தம் சகோதரர் சின்னப் பழுவேட்டரையர் அடிக்கடி எச்சரிக்கை செய்தும் தாம் பொருட்படுத்தாததைக் கூறினார். நந்தினியின் தூண்டுதலினால் மதுராந்தகத் தேவருக்குச் சோழ சிங்காதனத்தை உரிமையாக்க எண்ணியதையும் அதற்காக மற்ற சிற்றரசர்களுடன் சேர்ந்து சதி செய்ததையும் கூறினார். நந்தினியின் மூடுபல்லக்கில் மதுராந்தகனை அழைத்துப் போனதைப் பற்றியும், சம்புவரையர் மாளிகையில் நள்ளிரவில் நடந்த கூட்டத்தைப் பற்றியும் கூறினார். முதன் முதலில், வந்தியத்தேவன் காரணமாகவே நந்தினியின் பேரில் தமக்குச் சந்தேகம் உதித்தது என்றும், அதிலிருந்து பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றி யோசனை தோன்றியது என்றும் தெரிவித்தார். ஆனாலும் அவ்வப்போது நந்தினியின் மோகமாகிய மாயை தம் அறிவை மறைத்து வந்தது என்று துயரத்தோடு எடுத்துச் சொன்னார். கடைசியாக, கொள்ளிடத்து உடைப்பு வெள்ளத்தில் சிக்கிக் கொண்டதனால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் திட்டம் இன்னதென்று அறிந்து கொண்டதையும், விரைந்து திரும்பிக் கடம்பூர் சென்றதையும் கூறினார். வழியில் காளாமுக சைவரைப் போல் வேஷம் பூண்டதையும், இடும்பன் காரியின் உதவியினால் இரகசிய வழியில் சென்று அந்தப்புரத்தை அடைந்ததையும், யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்து நந்தினிக்கும் இளவரசருக்கும் நடந்த சம்பாஷ

ணையை ஒட்டுக் கேட்கும் ஆர்வத்தினால் ஒரு நிமிடம் தாமதித்ததையும், அதற்குள் இளவரசர் மாண்டு விழுந்ததையும் தெரிவித்தார். அவரைத் தாங்குவதற்காகத் தாம் பாய்ந்து சென்ற போது விளக்கு அணைந்ததையும், தம்மைப் பலர் சூழ்ந்து தாக்கியதையும், தாம் மூர்ச்சையுற்றதையும், பச்சை மலைக் குகையில் தமக்குப் பிரக்ஞை வந்ததையும், பின்னர் திரும்பி வந்ததையும் விவரித்தார்.

''சக்கரவர்த்தி! இவ்விதம் சோழர் குலத்துக்கு நான் பெருந்துரோகம் செய்தவனானேன். பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்கு என்னுடைய அரண்மனையிலேயே இடங்கொடுத்தேன். நம்முடைய பொக்கிஷத்திலிருந்து அவர்கள் சதிச் செயலுக்கு வேண்டிய பொருள் கொண்டு போக அனுமதித்தேன். தங்களையும், தங்கள் புதல்வர்கள் இருவரையும் ஒரே சமயத்தில் கொன்று விடுவதற்கு அந்தச் சதிகாரர்கள் திட்டமிட்டார்கள். தங்களைச் செவிடும் ஊமையுமான ஒரு தெய்வப் பெண்மணி தன் உயிரைக் கொடுத்துக் காப்பாற்றினாள். பொன்னியின் செல்வரைக் கேவலம் அறிவற்ற மிருகமாகிய ஒரு யானை காப்பாற்றியது. நான் ஆதித்த கரிகாலரைக் காக்க முயன்று தோல்வியுற்றேன். அவருடைய அகால மரணத்துக்கு நானே ஆதியிலும் நடுவிலும் முடிவிலும் காரணமானேன். ஐயா! துர்க்கா பரமேசுவரியின் சந்நிதியில் நான் எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையை இதோ நிறைவேற்றுவேன்!'' என்று கூறிவிட்டுத் தம் நீண்ட கரத்தில் பிடித்திருந்த வாளை வீசினார். அவருடைய நோக்கத்தை அறிந்து கொண்ட அனைவரும் திடுக்கிட்டுப் பிரமித்து நின்றார்கள். சிறிது சிறிதாக அவர் அருகில் நெருங்கி வந்திருந்த பொன்னியின் செல்வர் மட்டும் சட்டென்று பாய்ந்து பெரிய பழுவேட்டரையரின் வாள் ஓங்கிய கரத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டார்.

''ஐயா! பொறுங்கள்! வழிவழியாகச் சோழர் குலத்து மன்னர்களின் முடிசூட்டு விழாவின் போது பழுவேட்டரையர்கள் தான் கிரீடத்தை எடுத்துத் தலையில் வைப்பது வழக்கம். என் பட்டாபிஷேகத்தின் போதும் தங்கள் ஆகிவந்த கரத்தினால்தான் முடிசூட்டவேண்டும். அதற்குப்பிறகுதாங்கள் விருப்பம்போல் செய்து கொள்ளலாம். அதுவரையில் பொறுத்திருங்கள்!'' என்றார்.

இந்த வார்த்தைகள் சக்கரவர்த்தியையும் மற்ற குறுநில மன்னர்களையும் வியப்புக் கடலில் ஆழ்த்தின என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

(தொடரும்)



[redacted]



* ராஜாத்தியுடன் வேலம்மாள்.

# குப்பைத் தொட்டியில் ஒரு குழந்தை!



* சந்தய்யன்

அந்தப் பிஞ்சுக் குழந்தை பிறந்து ஏழே நாட்கள்தான் ஆகியிருக்கும். தொப்புள் கொடி கூட இன்னும் உதிரவில்லை. அதைப் பெற்றெடுத்தவளுக்கு எப்படித்தான் மனசு வந்ததோ! ஊட்டியில், ஜனநடமாட்டம் மிகுந்த பகுதியொன்றில், பொதுக் கழிப் பிடத்தையொட்டிய குப்பைத் தொட்டியரு கில் அதைப் போட்டு விட்டுப் போய் விட் டாள்! குழந்தை 'வீல்' எனக் கதறிய போது அங்கிருந்தவர்கள் கவனத்தை ஈர்த்தது. உடம்பில் ஒரு துண்டு துணி கூட இல்லாமல், தரையில் கிடந்த அந்தப் பெண் குழந்தைக்கு, யாரோ ஒரு பிளாட்பார வியாபாரி ஒரு துணி யைக் கொடுக்க, அதிலே குழந்தை சுற்றப் பட்டது.

''இது யாருடைய குழந்தை? எப்படி இங்கே வந்தது?'' என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்களேயொழிய, விடை யாருக்கும் தெரியவில்லை. அடுத்து எழுந்த கேள்வி, 'குழந்தையை என்ன செய்வது?'



அந்தச் சமயத்தில் அங்கே வந்து சேர்ந் தார் சத்தியா தேவி. ஊட்டியை அடுத்த நஞ்ச நாடு பள்ளிக்கூடத்தில் ஆசிரியை. அவர் குழந்தையை வாங்கிக் கொண்டார். நேரே ஊட்டி காவல் நிலையத்துக்குப் போனார். இன்ஸ்பெக்டர் பெருமாள் சாமியைச் சந் தித்து, விவரங்களை எடுத்துச் சொல்லி, குழந்தையைப் போலீசில் ஒப்படைத்தார்.

பிறகு, நடந்தது என்ன? இன்ஸ்பெக்டர் பெருமாள்சாமி சொல்லுகிறார்: ''கைக் குழந் தையை என்ன செய்வது என்று புரியாமல் திகைத்தேன். அனாதைக் குழந்தைகள் இல்லம் ஒன்றுடன் தொடர்பு கொண்டு என்ன செய்யலாம் என ஆலோசனை கேட் டேன். அதே சமயம் உதகையிலுள்ள எல்லா மகப்பேறு ஆஸ்பத்திரிகளுடனும் தொடர்பு கொண்டு, கடந்த ஒரு வார காலத்துக்குள் பிரசவித்து, மார்ச் 29ம் தேதியோ, முன் தினமோ டிஸ்சார்ஜ் ஆன பெண்மணிகள் பற்றிய விவரம் சேகரித்தேன். அதன் மூலம் குழந்தையின் தாயாரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. குழந்தைக்குப் பாலூட்டிப் பராமரிக்க அரசு மருத்துவமனைக்கு அனுப்பி வைத்தேன்.

''இந்தச் செய்தி காட்டுத் தீ போல் பரவி விட்டது. நான்கைந்து பேர் ''குழந்தையை

* வைராவி

நாங்கள் தத்து எடுத்துக் கொள்ளுகிறோம்'' என்று வந்து விட்டார்கள். ஒவ்வொருவரையும் தீர விசாரித்துக் கடைசியாகக் கோத்தகிரி டீ எஸ்டேட்டில் வேலை பார்க்கும் கந்தய்யன், வேலம்மாள் தம்பதியிடம் குழந்தையை ஒப்படைத்தேன்.''

''ஏன் சார்! சில காலம் சென்று, குழந்தையின் நிஜமான தாய், குழந்தையைக் கேட்டுக் கொண்டு வந்தால் என்ன செய்வீர்கள்?'' என்றோம் இன்ஸ்பெக்டரிடம். ''அது போன்ற சூழ்நிலை ஏற்பட்டால், குழந்தையைத் திருப்பிக் கொடுத்து விடுவதாய் உறுதிமொழி எழுதி வாங்கிக் கொண்ட பின்னர் தான், அதைக் கந்தைய்யனிடம் கொடுத்திருக்கிறோம்'' என்றார் பெருமாள் சாமி.

**க**ந்தையனின் முகவரியைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டோம். கோத்தகிரி தமிழ் நாடு தேயிலை வாரியத்தில் தேயிலை பறிக்கும் வேலை பார்க்கின்ற கந்தய்யன், வேலம்மாள் தம்பதியைச் சந்தித்தோம். நெற்றியில் பெரிய கறுப்புப் பொட்டுடன் ஒரு சின்ன ரோஜாப் பூப் போல வேலம்மாள் கையில் அந்தப் பிஞ்சு... முகத்தில் வெயில் பட்டதும் சுளித்துக் கொண்டு சிணுங்கிய அதனை வேலம்மாள் மார்போடு அணைத்துக் கொண்டே கூறினார்:

''நான் கால் வீக்கம் காரணமாய் அரசாங்க மருத்துவமனையில் அட்மிட் ஆகியிருந்தேன். அங்கே இந்தக் குழந்தை பற்றின விவரம் கேள்விப்பட்டேன். ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்ட இந்தக் குழந்தையைப் பார்த்தவுடன் என்னையும் அறியாமல் என் தாய்மை உணர்ச்சி மேலிட்டது. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய், இன்ஸ்பெக்டரிடம் குழந்தையை நான் எடுத்துக் கொண்டு போய் வளர்க்க ஆசைப்படுவதாய்க் கூறினேன்.

''நான் ஏற்கெனவே நான்கு முறை பெண் குழந்தைகளாகவே பெற்றெடுத்தேன். ஆனால் நான்குமே பிறந்த சில நாட்களிலேயே இறந்து போய் விட்டன.

''இனியும் குழந்தை பெறும் தெம்பு என் உடம்புக்கு இல்லை என்பதால் நமக்குக் குழந்தை பாக்கியம் கிடையாது என்ற முடிவுக்கே வந்து விட்டேன். இந் நிலையில் தான் எதிர்பாராத இந்த நிகழ்ச்சி நடந்தது'' என்றார் வேலம்மாள்.

''எனக்கு இவள் குழந்தையை வாங்கிக் கொண்டு வந்து விட்ட விஷயமே முதலில் தெரியாது'' என்றார் கந்தய்யன்.

''என் அம்மாவும், இவளுமாய் என்னைக் கேட்காமலே எடுத்த முடிவு இது. மறுநாள் இவளைப் பார்க்க ஆஸ்பத்திரிக்குப் போன போதுதான் விவரம் தெரிந்தது. ஆனால் அதற்காக நான் வருந்தவில்லை; ரொம்ப சந்தோஷம்தான்!'' என்றார் கந்தய்யன்.

**இ**ப்போதைககுக் குழந்தையைக் கண்டுபிடித்துப் போலீஸில் ஒப்படைத்த டீச்சர் பெயரை — சத்தியா தேவி குழந்தைக்குச் சூட்டியிருக்கிறார்கள். ''ஆனால் ராஜாத்தி என்றுதான் கூப்பிடுவோம்'' என்றார் வேலம்மாள்.

''ஒருவேளை நிஜமான தாயார் வந்து குழந்தையைக் கேட்டால், போலீஸில் உறுதிமொழி எழுதிக் கொடுத்துள்ளபடி குழந்தையைத் திருப்பிக் கொடுத்து விடுவீர்களா?'' என்று கேட்டதுதான் தாமதம்...

''அதெப்படிங்க கொடுப்போம்...? பெத்த குழந்தையை, ஈவு இரக்கமில்லாம போட்டுட்டுப் போனவ திரும்பி வந்து எப்படி கேட்பா? ஆண்டவனாப் பார்த்து, வரமாய்க் கொடுத்த புள்ளையை விட்டுப் பிரிய எப்படீங்க எங்களுக்கு மனசு வரும்?'' என்று உணர்ச்சி பொங்க, உரக்கவே கேட்டார் கந்தய்யனின் அம்மா வைராயி.

— எஸ். சந்திரமௌலி

படங்கள்: சோமு

---

## பிடித்த பாட்டு வருதா... போடு 'லீவ்' ஆபீசுக்கு....!

'........தேதியன்று காலையில் இன்னின்ன திரைப் படங்களிலிருந்து பாடல்களை ஒலிபரப்பப் போவதாக அறிவிப்பைக் கேட்டதுமே அலுவலகத்துக்கு விடுப்பு எடுத்துக் கொண்டு விட்டேன் என்றால் பாருங்கள்...! அன்று முழுவதும் வானொலியின் அருகிலேயே உட்கார்ந்து கொண்டு, ஒரு பாட்டு விடாமல் கேட்டேன்....'

— இப்படி ஒரு ரசிகர் சென்னை வானொலியின் வர்த்தக ஒலிபரப்புக்குக் கடிதம் எழுத, அக்கடிதத்தையும் அவர்கள் ஒலிபரப்பினார்கள்!

திரையிசை ரசிகர்தான் சினிமா பாட்டுக் கேட்க ஆபீஸுக்கு 'லீவ்' போட்டார் என்றால் அவர் கடிதத்தை ஒலிபரப்பி 'ஊக்கமளிக்க' வேண்டுமா, சென்னை வானொலி நிலையம்? ஒவ்வொருத்தரும் இப்படி 'லீவ்' போட ஆரம்பித்தால் இந்த நாடு என்ன ஆவது!

— அலமு



# 4

மயில்சாமி திருப்தியுடன் பீடியை நீண்ட தூரத்துக்கு இழுத்து, ஆர அமரப் புகையைக் கக்கினான். அவன் இருந்த நிலையில் பீடிப் புகை ஜவ்வாதாகக் கமழ்ந்தது. இனி அவனுக்குத் தனபாக்கியத்திடமிருந்து விடுதலை. எலிப் பொறியிலிருந்து அவன் தப்பி விட்டான். அந்த இடத்துக்கு ரங்கன் வந்து உட்கார்ந்து, மயில்சாமி இது நாள் வரை அனுபவித்ததையெல்லாம் அனுபவிக்கப் போகிறான். இனிமேல் மயில்சாமியின் பணம் பறிபோகாது. அவனுடைய நிஜார்ப் பையிலும் தொப்பிக்குள்ளும் ஒளித்து வைத்த பணம் தனத்தின் கைக்குப் போகாமல் பத்திரமாக இருக்கும். அவன் மேலும் நூறு மில்லி இருநூறு மில்லி குடிக்கலாம். இஷ்டம் போல் மிளகாய் பஜ்ஜி கடிக்கலாம்.

அன்று அவன் வழக்கத்துக்கு ஒரு மணி நேரம் முன்பாகவே ஆபீசுக்கு வந்து, சுகந்திக்கு எதிரே நின்றான். நாளைய மருமகன் ரங்கன் சோர்வாய் ஒரு மூலையில் தலை தாழ்த்தி உட்கார்ந்திருப்பது அவனுடைய கண்ணில் படவில்லை.

''என்னப்பா மயில்சாமி நாலே முக்காலுக்கே வந்துட்டே?'' என்று சுகந்தி கேட்டாள்.

''உன்னாலே ஒரு காரியம் ஆவுணம், சுகந்தி அம்மா!''

''எவ்வளவு தரம் சொல்றது அம்மா பாட்டியெல்லாம் என்னைக் கூப்பிடப் படாதுன்னு? என்ன வேணும்?'' அவன் அவளை அழைக்கும் விதத்திலேயே தன் வயது அதிகமாகி விடுவதாகச் சுகந்திக்குப் பட்டது.

''மன்னிச்சுக்க, கொயந்தே...''

சுகந்திக்குக் கோபம் வந்தது. அவள் என்ன மயில்சாமி கொஞ்சக் கூடிய குழந்தையா? பொறுத்துக் கொண்டாள்.

''என்ன வேணும்? அதைச் சொல்லு.''

''ஒரு அப்ளிகேசன்.''

''எதுக்கு?''

''அட்வான்சு!''

''எதுக்கு?''

''பொண்ணு கலியாணத்துக்கு. ஆயிரம் ரூபா.''

''அடப்பாவி!''

''ஏன் மிஸ்ஸ¬.''

''உன் பொண்ணுக்குத்தான் கல்யாணம் ஆயிடுத்தே? ஏற்கெனவே அட்வான்சு வாங்கியிருக்கியே?''

''அதையெல்லாம் கண்டுக்காதே, மிஸ்ஸ¬.''

''ரமணி கண்டிப்பா சிபாரிசு செய்ய மாட்டான்.''

''அப்ப இன்னா செய்யறது?''

''வேறே ஏதானும் காரணம் சொல்லு.''

''இன்னா சொல்றது?''

''பெண்ணுக்கு வளைகாப்பு, சீமந்தம்னு சொல்லு.''

''ஐய்யோ ஆத்தாடீ! அது வேணாம். வீடு ரிப்பேர் பண்ணன்னு எழுது'' என்றான் அவன்.

''முதலாளி கொடுப்பார்னு எனக்குத் தோணலை.''

''நீ எழுதும்மா... டைப் அடிம்மா.''

''சரி போ.. நாளைக்குக் காலையிலே வந்து முதலாளியைப் பாரு. ரமணி பக்கம் போகாதே.''

''சரி மிஸ்ஸ¬.''

''மயிலு!''

''என்ன மிஸ்ஸ¬?''

''ரங்கனுக்குக் கல்யாணமாம். அவனும் சொல்லலே... நீயும் சொல்லலே.''

''இன்னத்தை அம்மா சொல்றது? அவனும் ஒரே புடியா நிக்கறான். என் பொண்ணும் ஒரே அடியா நிக்குது!''

''இது அடுக்குமா, மயிலு?''

''நான் இன்னா மிஸ்ஸ¬ செய்வேன்? என் பொண்ணு... பொண்ணா அவ? பேயி... வேணாம்னேன்.. சரிதான் போயாங்குது.''

''ரங்கன் மாட்டிக்கிட்டான்.'' என்றாள் சுகந்தி. பிறகு, ''என்னிக்கு?'' என்று கேட்டாள்.

''நீ யார் கையிலும் சொல்ல வேணாம்!''

''சரி.''

''இந்த வெள்ளிக் கிழமை.''

''நாலு நாள்தான் முழுசா இருக்கு. ஏன் இன்னும் நோட்டீசு வைக்கலே?''

''நோட்டீசெல்லாம் கெடையாது, சுகந்தி மிஸ்ஸ¬. நீ கூட வரத்தாவலே.''

''கடன் அப்ளிகேஷனுக்கு மட்டும் நான் வேணும், இல்லே?''



மயில்சாமி சிரித்தான்.

மூன்று மணிக்கு ரமணி ரங்கனை அழைத்தான். அவன் மௌனமாய் நின்றான்.

''வா என்கூட!''

எங்கே என்று ரங்கன் கேட்கவில்லை. ரமணியைப் பின்தொடர்ந்தான்.

இருவரும் தெருவுக்கு வந்தார்கள். அவர்களுடைய காரியாலயக் கட்டடத்துக்குப் பக்கத்துக் கட்டடம் ஏற்கெனவே முழுதும் இடிக்கப்பட்டு விட்டது. புதிதாக நவீன மவுசில் ஒன்று வரப் போகிறது. அதற்கான அஸ்திவார வேலை இன்னும் ஆரம்பமாகவில்லை. வெட்ட வெளியாகக் கிடந்தது. அங்கே ரமணி சென்றான். நிழலில் நின்றான்.

''ரங்கா!''

''சொல்லுங்க ரமணி சார்!''

''நான் உனக்கு ரொம்ப வேண்டியவன். உன் நல்லது, பொல்லாதது எல்லாத்திலும் அக்கறை காட்டறவன். நீ என்னென்னிக்கும் குறைவில்லாம வாழணும்னு ஆசைப்படறவன்... உனக்கு என்ன உதவி எப்பத் தேவைப்பட்டாலும் செய்யத் தயாரா இருக்கிறவன்... என்ன, இதையெல்லாம் நீ நம்பறியா?''

''சத்தியமா நம்பறேன், ரமணி சார்!''

''அப்ப மயில்சாமி பெண் தனத்தை மறந்துடு.''

''ஏன் சார்?''

''அவகிட்டே நல்ல குணம் எதுவும் கிடையாது. அப்பனோட தினமும் மல்லுக்கு நிக்கறவ. ஊர் சுத்தறதுதான் அவ வேலை.''

''எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு.''

''அதான் இப்படித் துடிக்கிறே!''

''அவளுக்கும் என்னைப் பிடிச்சிருக்கு...''

''பணத்தை நீட்டற எந்த ஆம்புளையையும் தனத்துக்குப் பிடிக்கும். கண்ட கண்டவனோட சிரிச்சுக் கும்மாளமடிக்கிற கழுதை அவள்.''

''அவளை நான் கட்டிக்கக் கூடாதுன்னு தானே, ரமணி சார் அவளைப் பத்தி இப்படியெல்லாம் பேசறீங்க? நீங்க சொல்ற மாதிரியே அவ இருந்திருக்கலாம்... ஆனா இப்ப அவ, என்னைப் பார்த்ததும் மாறிப் போயிருக்கா...''

''ஆமாம், நீ பெரிய மன்மதன்! மடையா, அவ உன்னைக் கட்டிக்கப் போறதில்லே... உன் பணத்தைக் கட்டிக்கப் போறா! உன் மாசச் சம்பளத்தை மட்டும் இம்பான்னு நெனைக்காதே! நீ சேர்த்து வைச்சிருக்கிற அத்தனை பணத்தையும் முழுங்கி ஏப்பம் விடுவா! நான் சொன்னதைக் கேளு. உனக்குக் கலியாணம் பண்ணிண்டுதான் ஆகணும்னு இருந்தா, நான் ஒரு நல்ல பெண்ணாத் தேடறேன். தனம் வேண்டாம்.''

முதல் முறையாக ரங்கனுக்குக் கோபம் வந்தது. ஆனால் பலவீனமான கோபம். உள்ளூரப் பொருமித் தீர்த்தான்.

''நான் சொன்னது எதுவும் உன் காதில் ஏறியிருக்காதே?'' என்றான் ரமணி.

''ரமணி சார், நீங்க தெய்வம் மாதிரி... எம்பேர்லே சாபம் போடாம என்னை வாழ்த்துங்க.''

''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன்.''

''இந்த ஒரு விஷயத்திலே உங்க பேச்சுக்கு எதிரா நடக்கிறேன்னு என்னை உங்க மனசிலேந்து ஒதுக்கிடாதீங்க, ரமணி சார்!''

''உனக்கு இப்ப பணம் தேவைப்படுது இல்லே?''

ரங்கன் மௌனமாய் அவனைப் பார்த்தான்.

''எவ்வளவு?''

''ஆயிரம்.''

''ஆபீசிலேந்து கடனா வாங்கித் தரேன். மாசா மாசம் அம்பது அம்பதாக் கழிச்சுக்கு வாங்க!''

''அப்ப...?''

''எதுக்கு இப்பவே உன் பாங்க் பணத்திலே கை வைக்கறே... இருக்கவே இருக்கு. தனம் வந்ததும்... அவ பார்த்துப்பா'' என்ற ரமணி, ''வா, ஆபீசுக்குப் போகலாம். ஒரு அப்ளிகேஷன் எழுதித் தரேன். அதிலே கையெழுத்தை மட்டும் போடு, போதும்...'' என்றான்.

''சரி ரமணி சார்.''

''இந்தக் கையெழுத்துக்கு அப்புறம் உன்




பி.வி.ஆர்.

தலையெழுத்து எப்படி மாறப் போறதோ!"

ரமணியின் வார்த்தைகளை ரங்கனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இருப்பினும் வலு இழந்து போயிருந்த அவன், மௌனமாய் அவனுடன் நடந்தான்.

**1986 — டிசம்பர் 12 — வெள்ளி**

கந்தசாமி கோவிலில் பத்தே நிமிடங்களில் திருமணம் நடந்தது. பெண்ணும் பிள்ளையும் மாலை மாற்றிக் கொண்டார்கள். ரங்கன் மஞ்சள் கயிற்றை எடுத்தான். ரமணி அருகே சென்றான். சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். அவனுடைய கண்கள் கனத்தன.

தனபாக்கியம், முகத்தையே அடிக்கும் ஊதா நிறப் புடைவையில், பொறுமை இழந்தவளாய் ரங்கனைப் பார்த்தாள். ரமணி யார் என்று தந்தை மயில்சாமி மூலமாக ஏற்கெனவே தெரியும். ஆனால் ரங்கன் ஏன் ரமணியிடம் இவ்வளவு பக்தி செலுத்த வேண்டும்?

''போய்த் தாலியைக் கட்டு.. இனிமே இதை என்னால் நிறுத்த முடியாது!'' என்றான் ரமணி.

ரங்கன், 'கல்யாணமானவன்' என்ற நிலைக்கு உயர்ந்தான்!

அன்று இரவு எட்டு மணிக்கு மயில்சாமி, தன் பெண்ணையும் மருமகனையும், ஓட்டலுக்கு அழைத்துச் சென்றான்.

''மருமவப் புள்ளே, இது என் செலவு. வயிறு முட்டத் துன்னு!'' என்றான்.

ரங்கன் முயன்றான். சிறிது சாப்பிடுவதற்குள் வயிறு நிரம்பி விட்டதாகப் பட்டது. மயில்சாமி, யாரையும் லட்சியம் செய்யாமல் சாதத்தால் மேட்டூர் கட்டி, சாம்பார் ரசத்தை காவிரியாக்கினான்.

தனத்தால் எதுவுமே சாப்பிட முடியவில்லை. ரங்கனுக்குக் கவலையாக இருந்தது. அன்று மத்தியானமும் அவள் சாப்பாட்டில் பற்று இல்லாமல் இருந்தாள். இப்போதும் சாப்பிடாமல் இருக்கிறாள். ஏன்?''

''தனம்!'' என்று ரங்கன் ஆரம்பித்தான்.

''என்னா?''

''பசிக்கலையா?''

''பசிச்சா துன்னிருக்க மாட்டேன்? வா, நாம வூட்டுக்குப் போலாம்.''

''அப்பா?''

''அது இன்னிக்கெல்லாம்துன்னுக்கிட்டே இருக்கும். நீ வா, போகலாம்.''

இருவரும் வீட்டை நோக்கிப் புறப்பட்டார்கள்.

மயில்சாமி கண்டுகொள்ளவில்லை.

வீட்டை அடைந்ததுமே தனத்துக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. சுவரைப் பிடித்துக் கொண்டு, கண்கள் செருக நின்றாள். வயிற்றில் ஏற்பட்ட பிரளயம் வாய் வழியாகக் கொட்டியது.

ஒரு மாத கால நோன்பின் போது பசித்துன்பம் எத்தகையது, தாகத் துடிப்பு எப்படிப்பட்டது என்பதையெல்லாம் அனுபவித்து உணரும்போது, பசியாலும், தாகத்தாலும் வருந்தும் ஏழை, எளியவர்கள் மீது அன்பும், கருணையும் ஏற்படுவது இயல்பேயாகும். அவர்களின் துன்பத்தில் பங்கு கொள்ள மனம் விழைகிறது. எனவேதான் முஸ்லிம்கள் ரமளான் நோன்பு நாட்களில் ஏழை, எளியவர்களுக்கு வாரி வழங்கி

''தனம்... தனம்... என்னாச்சு... ஒடம்பு சரியில்லையா... சொல்லு, தனம்! டாக்டரைக் கூட்டியாரட்டுமா?''

அவள் 'வேண்டாம்' என்று தலையாட்டி விட்டு, நீண்ட நேரம் மௌனம் சாதித்தாள். பிறகு —

''நீ இப்ப என் புருசன் இல்லே?''

''ஆமாம். என்ன சந்தேகம், தனம்?''

''இதையெல்லாம் தண்ணி ஊத்தித் தள்ளி, தொடைச்சுடறியா?''

''நீ மொதல்லே அங்கே ஓரமா உட்காரு, தனம்.''

''சல்தியா தொடச்சாத்தான் நாம படுக்கலாம்!''

''இதோ!''

தலையணையில் தலை விழுந்ததும் தனம் தூங்கி விட்டாள். பல தடவை விரல் நடுக்கத்துடன், அவளுடைய முகத்தையும், இடையையும் ரங்கன் நெருடினான். அவள் உடம்பு அசையவுமில்லை.

அவனுடைய முதல் இரவு இப்படியா முடிய வேண்டும்?

மறுநாள் காலை எட்டு மணிக்கு மயில்சாமி வந்தான்.

''தம்பி!''

''என்ன மயிலு?'' ரங்கனுக்கு 'மாமா' என்று அழைக்க வரவில்லை.

''நீயும் என் பொண்ணும் இங்கே இருங்க.. நான் போறேன்.''

''எங்கே போறே?'' என்றாள் தனம்.

''இனிமே நான் ஆபீசுலேயே தங்கிக்கலாம்னு இருக்கேன்.''

''துட்டு குடுத்துட்டுப் போ!''

''இதோ உன்னைக் கட்டிக்கிட்ட புருசன் இருக்கான்... இனிமே அவன்கிட்ட வாங்கிக்க!''

சொன்ன மயில்சாமி, ஒரு சிறு பெட்டியை எடுத்தான்.

''அது எம் பொட்டி. தொடாதே'' என்றாள் தனம்.

''நீ புச்சா ஒண்ணு வாங்கிக்க! தம்பி, எம் பொண்ணுக்கு நல்ல பொட்டியா வாங்கிக் கொடு,'' என்று கூறிய மயில்சாமி, தனக்கு இருந்த ஒரிரு துணிகளைப் பெட்டியில் அள்ளிப் போட்டுக் கொண்டான்.

''போன மாசத்து கொடக்கூலியே



மகிழ்கிறார்கள். ''நோன்புப் பெரு நாளை'யே 'ஈகைத் திருநாளாக'வும் கொண்டாடி மகிழ்கிறார்கள்.

தக்கோலம் அ. முஸ்தபா.

பாக்கி!'' — தனம்.

''மருமவப்புள்ளை குடுப்பான்!'' என்ற மயில்சாமி, ''வர்றேன் தம்பி! எம் பொண்ணை நல்லாப் பார்த்துக்க... நான் அப்பப்ப வந்து அவளைப் பார்த்துக்க றேன்!''

அவன் போனதும், ''போன மாசம் அறுபது ரூபா, இந்த மாசம் அறுபது ரூபா கொடக் கூலி கொடுக்கணும்'' என்றாள் தனம்.

''கொடுத்துடலாம்.''

''வூட்லே தும்மாத்தூண்டு அரிசி இல்லே... ஒரு புட்டி கிஸ்னாயில் இல்லே... அல்லாம் வாங்கியாகணும்...''

''வாங்கலாம்.''

''பணம் எவ்வளவு வைச்சுட்டிருக்கே?''

ரங்கன் கணக்குப் போட்டுப் பார்த்தான். ஆபீசில் கடனாக வாங்கிய ஆயிரத்தில் முப்பது ரூபாய் பாக்கியிருந்தது. வேட்டி, புடைவை, தங்க முலாம் பூசிய பித்தளை நகைகள், மாலை மற்றும் கோவில் செலவு கள் எல்லாமாகப் பணம் கரைந்து விட்டது.

''இப்பச் செலவுக்கு எவ்வளவு வேணும், தனம்?''

''ஐந்நூறு கொண்டா?''

''ஐந்நூறா?''

''ஏன் வாயைப் பொளக்கிறே? ரெண்டு வேளை நான் பொங்கிப் போடத் தாலே!''

''மாசா மாசம் ஐந்நூறு ஆகுமா, தனம்?''

''இன்னா சம்பளம் வாங்கறே, நீ?''

''நானூத்தம்பது கொடுக்கறாங்க.''

''நெறையப் பணம் சேர்த்து வைச்சிருக் கேன்னு அப்பா சொல்லிச்சே!''

''கொஞ்சம் இருக்கு!''

''இப்ப நான் உன் பொஞ்சாதி! என் கையிலே நீ அல்லாம் சொல்லணும்.''

''மூவாயிரம் ரூபா இருக்கு.'' என்ற ரங்கன், 'பிக்சட் டெபாசிட்' பற்றிக் கூற வில்லை.

''அப்ப ஒரு ஆயிரம் எடுத்து வா. எனக்குப் பொடவை, ரவிக்கை, பாடி, பாவாடை வாங்கணும்.''

''ஆயிரமா?''

''ஆமாம், ஆயிரம்தான். பொண்டாட்டி கேட்டா புருசன் வாங்கித் தருவான்? ஒனக் காத் தோண வாணாம்?''

நேற்று இரவு முக்கி முனகிய தனமா இப்போது இப்படி முரட்டுத்தனமாகப் பேசு கிறாள்? போன ஞாயிற்றுக்கிழமை அவனு டைய உடலை வருடிவிட்ட தனமா இப்போது கன்னத்தில் அடிப்பது போல் சாடுகி றாள்.

''ஆபீஸ்லேர்ந்து திரும்பி வர்றப்ப கொண்டு வர்றேன்.''

''எப்ப பணம் எடுப்பே?''

''பன்னிரண்டு மணிக்கு.''

''நான் அங்கேயே வந்து வாங்கிக்க றேன்.''

''ஏன் தனம்?''

''எனக்கு இன்னிக்கே பொடவை எடுத்தா கணும்.''

ரங்கனுக்கு எதிர்த்துப் பேசத் தைரியம் முளைக்கவில்லை. அவளுடைய போக்கி லேயே சில நாட்கள் சென்றால், ஒரு வேளை அவனுடைய வார்த்தைக்குத் தனம் கட்டுப் படுவாள் என்ற நப்பாசை உண்டாகியது.

ஆயிரம் ரூபாயை அவள் கறந்து வாங்கிக் கொண்டாலும், தனம் வஞ்சனை செய்யாமல் வீட்டுக்கு வேண்டியவற்றையெல்லாம் வாங் கிப் போட்டாள். அவனுக்கு நல்ல சாப் பாடும் கிடைத்தது.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அவன் அவளிடம் கேட்டான்.

''உனக்கு வயிறு கொஞ்சம் பெரிசா இருக்கு, இல்லே?''

''ஆமாம்.''

''உன் அழகு இன்னும் அதிகமாத் தெரிய ணும்னா, உன் வயிறு குறையணும். சாப் பாட்டைக் குறைச்சுப் பாரு.''

''வயிறு தானாக் குறைஞ்சுடும்.''

''அப்படியா?''

''ஆமாம். நீயே அசந்து பூடுவே!''

''விளக்கை அணைச்சுடட்டுமா?''

''இன்னுமா அணைக்கலே?''

இருட்டில் அவளை அவன் அணைத்துக் கொண்ட போது, ''யோவ், நீ நோஞ்சானா இருக்கேய்யா... ரெண்டு மாசத்திலே நீ கொழு கொழுன்னு ஆகணும்!''

''நீ போடற சோத்திலே வஸ்தாது கணக்கா ஆயிட மாட்டேன்?''

அவன் அவளை இறுகப் பற்றிக் கொண் டான்.

''எனக்குத் தூக்கம் வருது!''

அவன் தன் கைகளைத் தளர்த்தினான்.

அவள் மெல்லிய குறட்டையுடன் தூங்கிக் கொண்டிருந்த போது, ரங்கன் விழித்திருந் தான்.

ரமணி கண்ணெதிரே தோன்றினான்.

இவளைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று ரமணி ஏன் உபதேசித்தான்?

கேள்வியே ஒரு பெரும் சுமையாக மார் பைத் தாக்கியது.

(தொடரும்)

# யாரோ ஒரு பெண்ணோடு ஸ்கூட்டரில்..!

பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்த தங்கம், எதிர்த்திசையில் சென்ற ஸ்கூட்டரைப் பார்த்துத் திடுக்கிட்டாள்.

சாட்சாத் நரேன்தான்!

கையை மலர்த்தி மணியைப் பார்த்தாள். மாலை ஐந்தேகாலை நெருங்கிக் கொண்டிருந்தது. கல்லூரி முடிந்து வீட்டுக்கு வராமல், மவுண்ட் ரோட்டில் எங்கே போகிறான்?

பளிச்சென்று மின்னலாய் ஏதோ தாக்கிற்று.

ஸ்கூட்டர் பின்னால் யாரோ பெண் உட்கார்ந்த மாதிரியில்லை?

அடிவயிற்றிலிருந்து ஒரு சதைக் கோளம் நெஞ்சுக்குழியை அடைக்க முயல, உடலின் நரம்பு மண்டலக் கேந்திரத்தை யாரோ உலுக்கி விட்டது மாதிரி வெலவெலத்து. ஸ்கூட்டர் சென்ற திசையைப் பார்த்தாள்.

நரேன்தான் பின்னால் ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு போகிறான்! சல்வார் கமீஸ் அணிந்து, துப்பட்டா காற்றில் பறக்க, சுவாதீனமாய் அமர்ந்திருந்தாள். நல்ல வளர்த்தியான பெண்ணென்று பார்த்த மாத்திரத்திலேயே புரிந்தது.

மனம் கலங்கி வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் தங்கம்.

''ஏம்மா, எப்படியோ இருக்கே?'' என்று கேட்ட பூமாவிற்கு-பி. காம். முதலாமாண்டு படிக்கிற பெண் – பதில் சொல்லாமல் சோபாவில் சாய்ந்து கொண்டாள். பத்தாம் வகுப்புப் படிக்கிற லதா, மும்முரமாய் வீட்டுப் பாடம் படித்துக் கொண்டிருந்தாள்.

பத்து வருடங்களுக்கு முன்னால் பதினோரு வயது நரேனையும் எட்டு வயது பூமாவையும் குழந்தை லதாவையும் விட்டு விட்டுச் சில நிமிட 'மாஸிவ் ஹார்ட் அட்டாக்'கில் கணவன் பளிச்சென்று முறிந்து விழுந்ததும், கணவனின் அலுவலகத்தில் கருணையின் பேரில் அவளுக்கு வேலை கொடுத்ததும்... அன்று முதல் இன்றுவரை அவள் வாழ்க்கையின் ஆதாரம் நரேனல்லவா? அவன் வளர்ந்து குடும்பச் சுமையை ஏற்கத் தோள் கொடுப்பானென்ற எதிர்பார்ப்புத்தானே அவளை இயக்கிற்று?

'...இன்னும் பத்துப் பன்னிரண்டு வருஷம், ஓடிப் போயிடும் தங்கம்! நரேன் படிச்சுட்டு வேலைக்குச் சேர்ந்துட்டான்னா, குடும்ப சாரத்யத்தை எடுத்துண்டுட்டுப் போறான்! பூமா, லதா, கல்யாணம் 'ஜாம், ஜாம்'னு நடக்கும்... நல்ல பெண்ணாய்ப் பார்த்து நரேனுக்கு முடிச்சுடு. அதுலேதான் உன் சாமர்த்தியமும் குடும்ப முன்னேற்றமும் இருக்கு...' என்று உறவினர்கள் கூறியது எவ்வளவு தெம்பாயிருந்தது!

அன்று முதல் இன்று வரை நரேனைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வருகிறாள்! கம்ப்யூட்டர் என்ஜினியரிங் ஆசைப்பட்டானென்று, நாற்பதாயிரம் ரூபாயைக் கொடுத்துத் தனியார் என்ஜினியரிங் கல்லூரியில்' சேர்த்தது அவன் திருப்திக்காகத்தானே?

அவனா இப்படி? யாரந்தப் பெண்? ஸ்கூட்டரின் பின்புறத்தில் சர்வ உரிமையுடன்...? எத்தனை நாளாய்ப் பழக்கம்? இது என்ன பழக்கம்?

வயிறு கலகலத்து அச்சம் புரண்டது.

காதல், கீதல் என்று ஏதாவது மாயச் சுழலில் சிக்கியிருப்பானோ? கடைசி வருஷம், பரீட்சை சமயத்தில் கண்ட நினைவுகள் மனத்தை அலைக்கழித்தால், படிப்பு என்ன ஆகும்?

பார்த்த சினிமாக்களும், படித்த கதைகளும் அச்சுறுத்தின.

அழகாய் இருக்கிறான், என்ஜினீயரிங் படிக்கிறான் என்று அந்தப் பெண் வளைத்துப் போட்டுவிட்டதோ? அவ்வளவு பலவீனனா நரேன்? குடும்பப் பாசத்தை மீறி விடமுடியுமா, அவனால்?

....நம்ப முடியாது. இந்த வயதில் பெண் மோகம் அபூர்வ வலிமை மிக்கது. இப்படிப் பழகினால் மனம் எப்படி ஒரு நிலைப்படும்?

கல்லூரி விழாக்களில் எடுத்தது, உல்லாசப் பயணத்தில் எடுத்தது என்று அவ்வப்போது புகைப்படங்களைக் காட்டுவான் நரேன்.

''...அம்மா இது எஸ்தர்... இவபேரு கல்யாணி. இவன் ரகுநாத். சினிமா டைரக்டரோட பையன்... இவ நர்மதா... இதோ இவ பேரு ரூபா. வெரிஇன்டலிஜென்ட்...'' என்று ஒவ்வொருவராய்க் காண்பிக்கிறபோது இவனருகில் சிலபெண்கள் நிற்பது கண்டு உள்ளூரக் கலங்குவாள்....

'கொஞ்சம் தள்ளி நின்னாத்தான் என்ன? தோளோட தோள் உரசராப்பல நிக்கணுமா?' என்று உறுத்தும் மனத்தைக் காட்டாமல், புன்சிரிப்புடன் புகைப்படங்களைப்

ஜெயந்தன்

பார்ப்பாள்.

அப்போதே நாக்குக்காய்த் தடை விதித்திருக்கலாமோ? சகஜமாய் எடுத்துக் கொண்டது. இப்படி முற்றிப் போய்விட்டதோ?

தான் பள்ளியில் படித்த நாட்களில் அவ்வளவு கண்டிப்பாய் இருந்த காலத்திலேயே, வீடுநிறைய மனிதர்கள் இருக்கும் போதே, ஒருவரும் அறியாமல் அடுத்தவீதி மளிகைக் கடைக்காரர் மகனைக் காதலித்து வீட்டை விட்டு ஓடிப்போன, எதிர்வீட்டு மணியக்காரர் பெண் மாதுரியின் நினைவு வந்ததும் நடுங்கிப் போனாள் தங்கம்.

இவ்வளவு கண்டிப்பையும் மீறி ஓர் ஆணும் பெண்ணும் கவர்ந்திழுக்கப்பட்டிருக்க முடியுமானால், அறையில் நடப்பது அம்பலத்தில் விவாதிக்கப படும் இந்தக் காலத்தில் எதுதான் சாத்தியமில்லை?

மனம் மறுகிற்று.

**மா**லை மயங்கிய நேரத்தில் ஸ்கூட்டர் உள்ளே நுழையும் சத்தம் கேட்டது.

''....காலேஜிலே கொஞ்சம் லேட்டு. என் பிரண்டுக்கு மாரேஜ் செட்டிலாயிருக்கு. இன்விடேஷன் செலக்ட் பண்ணப் போயிருந்தேன்....''

சொல்லிக் கொண்டே தனது அறைக்குச் சென்ற நரேனைக் கண்ணிமைக்காது பார்த்தாள் தங்கம்.

இன்விடேஷன் வாங்கப் போயிருந்தானாமே? ஒரு பெண்ணுடன் ஸ்கூட்டரில் போனதைச் சொல்லவில்லையே? மறைக்கிறானே? மனத்தில் கள்ளம் புகுந்துவிட்டதே? அந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடிப்பானோ? படிக்கிறபோதே பையனைக் கவர்ந்திழுத்து விட்ட பெண், திருமணத்திற்குப் பிறகு தன் குடும்பத்திற்கு உழைப்பதை அனுமதிப்பாளா, என்ன?

குமுறி அழவேண்டும் போல் துக்கம் எழுந்தது.

'யார்ரா அவ?' என்று நேருக்கு நேர் கேட்டு விட்டால் என்ன என்று தோன்றிற்று. சற்று நிதானித்தாள். தகப்பனில்லாத பிள்ளை. 'தான்தான் இந்த வீட்டின் முதல் புருஷன்' என்கிற ஈகோவுடன் வளர்ந்திருக்கிறவன். நேருக்குநேர் கேட்டு, அவன் ஈகோவைத் தாக்கி, அதனால்'விளைவு ஏடாகூடமாகிவிட்டால்?

'இது முள்ளில் விழுந்ததுணி. கிழியாமல் எடுக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டாள்.

ஆனாலும் அடிவயிறு கலங்கியதைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

**நா**ட்கள் கனமாய் ஓடின.

காலையில் சீக்கிரம் போவதும் மாலையில் தாமதமாய் வருவதுமாய் நரேன் பெரிதும் மாறிவிட்டிருந்ததாகத் தோன்றியது தங்கத்திற்கு.

இதற்கிடையில் நகைக்கடையில் ஒரு பெண்ணுடன் நரேனைப் பார்த்ததாக உடன் பணிபுரியும் சிநேகிதி கூறியதும் நடுங்கிப் போனாள். பணம் செலவு செய்யுமளவுக்கு வந்துவிட்டானா? ஒரேபிள்ளை கேட்கிறான் என்று சுணங்காமல் பணம் கொடுத்தது இப்படிச் செலவு செய்யவா? இதற்குமேல் முற்றவிட்டால் விபரீதமாகிவிடுமே? எப்படி நிறுத்துவது? எங்கே விசாரணையைத் தொடங்குவது?

ஒருநாள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, அவன் உள் மனத்தை அறிவதற்காக, கல்லூரி மாணவ, மாணவியர் காதலிப்பதை வன்மையாய் விமரிசித்த போது, அவன் சொன்ன பதில் அவளைக் கலக்கிற்று.

''... காதல், கல்யாணம் அப்படீங்கறதைப் பத்தின கான்செப்டிலே போன ஜெனரேஷனுக்கும் இந்த ஜெனரேஷனுக்கும் அடிப்படையிலேயே நிறைய, வித்தியாசம் இருக்கு. இந்த ஜெனரேஷனோட பிரச்னைகளை, போன ஜெனரேஷனைச் சேர்ந்தவங்களோட அனுபவங்களாலே அளவிடறதோ, மதிப்பிடறதோ தப்பு... லெவல்ஸ் ஆர் டிஃபரண்ட்....''

எவ்வளவு தெளிவாய், தீர்க்கமாய்ப் பேசினான்? அந்த அளவுக்கு மாற்றியிருக்கிறாளா அந்தப் பெண்?

முகம் தெரியாத அந்தப் பெண் மீது குரோதம் எழுந்தது.

''...**அ**ம்மா, அண்ணா யாரோ ஒரு பொண்ணோட ஸ்கூட்டரிலே வரான்....'' என்று லதா சொன்னதும், வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்தாள் தங்கம்.

'.... இவ்வளவு தூரம் வந்துவிட்டதா? வீட்டிற்கே அழைத்துவரத்துணிந்து விட்டானா?'

''...அம்மா... இவ பேரு எஸ்தர். என் கிளாஸ்மேட்...''

நரேன் அறிமுகப்படுத்தியதும், முகத்தில் எந்த பாவமுமில்லாமல் தலையசைத்தாள். பூமாதான் சிரித்து வரவேற்றாள்.

சிறிதுநேர அசௌகர்யமான மௌனத்

திற்குப்பின் ''நானே சொல்லட்டுமா?'' என்று நரேன் அந்தப் பெண்ணிடம் கேட்கவும், ''வேண்டாம் நரேன்... நானே சொல்லிடறேன்'' என்று சிணுங்கிய எஸ்தரை ஆழமாய்ப் பார்த்தாள் தங்கம். எரிமலையாய் வெடிக்கத் தக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''.....ஆண்ட்டி! ஒரு ரிக்வெஸ்ட்... அடுத்த மாசம் எனக்குக் கல்யாணம். என் 'வுட்பி'க்கு ஒரு சஃபாரி செட் ப்ரசென்ட் பண்ணலாம்னு இருக்கேன்... நல்ல கலரா செலக்ட் பண்ணணும்... அதுக்காக ஷாப்பிங் போகலாம்னு நரேனைக் கூப்பிட்டா, வரமாட்டேங்கறான் ஆண்ட்டி! நரேனுக்கு எக்ஸலெண்ட் கலர் சென்ஸ் உண்டு... ஹைலி ஈஸ்தடிக்.... என் கல்யாணப்பத்திரிகை செலக்ட் பண்ணிக் குடுத்தது நரேன்தான்... மார்வலெஸ் டிசைன்!.... எல்லாரும் ரொம்ப அப்ரிஷியேட் பண்ணினாங்க... வெட்டிங் நெக்லெஸ் ஒண்ணு செலக்ட் பண்ணிக் குடுத்தான் பாருங்க.... சிம்ப்ளி ஃபண்டாஸ்டிக்!..... அதுனாலே கூப்பிட்டா, ரொம்ப அலட்றான். பரீட்சை இருக்காம். படிக்காமெயே சென்டம் வாங்குவான்... ப்ளீஸ் வரச் சொல்லுங்க ஆண்ட்டி...''

சின்னக் குழந்தைமாதிரிக் கையைப் பிடித்துக் கொண்டு அந்தப் பெண் கெஞ்சக் கெஞ்ச, பிரமிப்பின் உச்சத்தை விரைவாய் எட்டலானாள் தங்கம்.

''....அம்மா, நான் சொல்றதைக் கேளு... இவதுணி செலக்ட் பண்ண ஆறு மணி நேரம் ஆகும். நூறு கடை ஏறி எறங்குவா... எனக்கு நெக்ஸ்ட்வீக் 'எம்டெக்' என்ட்ரன்ஸ் எக்ஸாம் இருக்கு. நெறையப் படிக்கணும். ஏற்கெனவே இன்விடேஷனுக்கு மூணு மணி நேரம் அவுட்!..... அப்புறம் நகை செலக்ட் பண்ண நாலு மணி நேரம் க்ளோஸ்! ஈவினிங் பஜார் பக்கம் நான் போனாலே அடிப்பாங்கன்னு நெனைக்கறேன்... அவளுக்கு அவ கல்யாணம் முக்கியம். எனக்கு என் படிப்பு முக்கியம். இனிமே ஒரு நிமிஷம் கூட வேஸ்ட் பண்ண முடியாது. என்னாலே..... நீ சொன்னாத்தான் நான் கேப்பேன்னு, உன் சிபாரிசுக்கு வந்திருக்கா....''

நரேன் சொல்லச் சொல்ல, மனத்தை இறுக்கிய சந்தேகக் கட்டுக்கள் தெறித்து விழுந்தன. அலாதியான நிம்மதி அவளை ஆட்கொள்ள, மனத்தின் பழைய தலைமுறை அழுக்குகள் கரைந்து, உருகி, மறைந்து போயின.

''.....கல்யாணம்னு சொல்றா.... போயிட்டுவா நரேன். நாளைக்குப் படிச்சுக்கலாம்...'' என்று கண்கலங்கத் தங்கம் கூறியதும், கட்டை விரலை உயர்த்தி நரேனைப் பார்த்துக் கண் சிமிட்டினாள் எஸ்தர்.

அந்தச் சிமிட்டல் இதமாயிருந்தது தங்கத்திற்கு.



## அருள்வாக்கு

இத்தனை பாவம் பண்ணி விட்டோமே என்று அழவே வேண்டாம். பாபத்தை ஒரே க்ஷணத்தில் த்வம்ஸம் பண்ணும் வஸ்து இருக்கிறது. அதை எங்கேயோ போய்த் தேடிப் பெற வேண்டியதில்லை. நாமே உண்டு பண்ணிக் கொண்டு விடலாம். கஷ்டமே இல்லை. இரண்டே எழுத்து. தேஹத்தில் உயிர் போலவும், கோயிலில் மஹாலிங்கம் போலவும் வேதங்களின மத்தியில் ஜீவரத்னமாயிருக்கும் அதை நாம் என்ன பண்ண வேண்டும்? பெரிசாகத் திரவியம் சேர்த்து அபிஷேகம் பண்ணணுமா? திநுசு திநுசாய் நைவேத்யம் செய்யணுமா? மாலைகள், நகைகள் சாத்தணுமா? ஒன்றும் வேண்டாம். ஓயாமல் வேண்டாத விஷயங்களில் புரண்டு கொண்டிருக்கிற நாக்கைக் கொஞ்சம் அதற்காகப் புரட்டினால் போதும்.

பரமேச்வர ஸ்வரூபத்தை நாம் பார்க்க முடியுமா? விக்ரஹமாக வைத்தால் கூட எப்போதும் பார்க்க முடியுமா? இந்த நாமா இருக்கிறதே இதுவும் ஸாக்ஷாத் அவனேதான். இதை நினைத்த மாத்திரத்தில் நம்மிடம் வரும்படி பண்ணிக் கொண்டு விடலாம்.

அதனால் எப்பொழுதெப்பொழுது முடிந்தாலும் 'சிவ' என்ற இரண்டு அக்ஷரங்களைச் சொல்லி லோகமெல்லாம் சிவம், மங்களம், கல்யாணம் தழைக்கச் செய்ய வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.




# ரம்பமாக மாறும் ரசிகர்கள்!

"இப்போ தியாகராஜர் கிருதி ஒன்று பாடுவார் பாருங்கள்!'' என்பார் பாகவதருடன் அந்நியோன்யமாகப் பழகும் விசிறி.

''ஒரு தீட்சிதர் கிருதி பாடுவார் என்று நினைக்கிறேன்!'' என்பார் இன்னொரு அபிமானி. ''ஊஹூம்... கார்த்தாலதான் வித்வானைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தேன். இந்தத் தியாகராஜர் கிருதியைப் பாடச் சொன்னேன். நீர்தான் இதைப் பாட லாயக்கு என்றேனே!.... சரணத்தில் எப்படி ஸ்வரம் கொட்டப் போகிறது பாருங்கள்!'' என்பார் முன்னவர்.

இரண்டும் பாடாமல் வேறு ஏதோ பாட்டைப் பாடுவார் பாகவதர்.

''ஆகா பிரமாதம்! இவர் இதைப் பாடி நான் கேட்டதே இல்லை. நான்தான் 'புது உருப்படியாக' ஏதாவது பாடுங்க சார்னு கார்த்தால கேட்டுண்டேன்'' என்று பிளேட்டைத் திருப்பிப் போடுவார் ரசிகர்.

பாடகரின் இந்த விசிறிகள் வயலின் வித்வான் வாசிக்கும் போது எதையோ பறிகொடுத்தது போல் உட்கார்ந்திருப்பார்கள். அல்லது வாய் ஓயாமல் பேசுவார்கள். ஆனால் பாடகர் பாடும் போது இவர்கள் போடுகிற ஆஹாவுக்கும் ஆஹாஹாவுக்கும் ஒரு அளவே இராது.

எல்லா ரசிகர்களிலும் மோசமான ரகம், கொஞ்சம் பாடத் தெரிந்த ரகம்தான். தன் இருக்கையிலேயே உட்கார்ந்து கொண்டு, யாருக்கும் கேட்காது என்ற நினைப்பில் அல்லது பலருக்கும் கேட்க வேண்டும் என்பதற்காகவே ஒரு குட்டிக் கச்சேரியே செய்து விடுவார். இதுவாவது தொலையட்டும். ஏதோ தாளத்தில் பெரிய சூரர் என்று நினைத்துக் கொண்டு, கூடவே தாளம் போட்டுக் கொண்டு வருவாரே அவர் இன்னும் மோசம். இடது உள்ளங்கையில், வலது கையால் ஓங்கி ஓங்கி அடித்துத்தாளம் போட்டு அலற அடித்து விடுவார் பேர்வழி.

இன்னொரு ரகம் இருக்கிறது. இவர்களும் பேசிப் பேசிக் கழுத்தறுப்பார்கள். ஆனால் இவர்கள் குறிப்பிட்ட பாகவதரின் விரோதிகள்! ''தோடி, பைரவி, காம்போதியைத் தவிர வேறு ஏதாவும் இவர் பாடிக் கேட்டிருக்கிறீர்களோ?'' என்பார் ஒருவர்



கிண்டலாக.

''அதுக்கே அவருக்கு ஒரு ஷொட்டுக் கொடுக்கணும். இதையே வைத்துக் கொண்டு இத்தனை வருஷம் தள்ளியிருக்கிறாரே. ஒரு கூட்டல் குறைச்சல் இல்லா





மல்!'' என்பார் இன்னொருவர், ஏளன மாக.

இதற்குள் பாடகர் வலியில் பிராணன் போகிற மாதிரி அபிநயித்து, கையை, கழுத்தை வளைத்து, கூட்டத்திலிருந்து எப்படியோ ஓர் அப்ளாஸ் வாங்கி விடுவார்.

''ப்ஸ–.... இதுக்குத்தானா! இதுக்கு, முன்னாலேயே கையைத் தட்டித் தொலைத்து, மனுஷன் படுகிற அவஸ்தை யிலிருந்து காப்பாற்றியிருக்கலாம்!'' என்று அதற்கும் ஒரு கமெண்ட் எழும்!

**நா**ன்காவதாக ஒரு ரகம் இருக்கிறது. ஒரே அமுக்கமான ரகம். வாயைத் திறக் காது. வாயில் வெற்றிலையைப் போட்டுக் குதப்பிக் குதப்பி, எப்போது பாகவதர் கொஞ்சம் 'அறுக்க' ஆரம்பிக்கிறாரோ அப்போது, பாதி வரிசையிலிருந்து எழுந்து, சுமார் இருபது ஜோடி முழங்கால் முட்டி களையும் தட்டி இடித்துக் கொண்டே கடைசி வரை போய் 'ப்ளிச்'சென்று வெளியே துப்பி விட்டு, சோடாவால் வாயைக் கழுவிக் கொப்பளித்து உமிழ்ந்து விட்டு, வெளியே நிற்கிற அத்தனை பேரின் வாயையும் கிண்டி விட்டு, மறுபடி எல்லார் முட்டிகளையும் தட்டி விட்டுக் கொண்டே வந்து இடத்தில் உட்காருவார். பிறகென்ன? வெற்றிலைப் பெட்டியைத் திறந்து, பாக்கை நறுக்கிக் கையில் வைத்துக் கொண்டு, வெற்றிலையைப் பரம சிரத்தையுடன் பிளந்து, சுண்ணாம்பு தடவி, மடித்துச் சுருட்டி, வாயில் திணித்துக் கொண்டே, பாகவதரின் ஸ்வரப் பிரஸ்தாரங்களை ரசிப் பதை விட, தான் வெற்றிலை போடும் அமர்க்களத்தைத் தாமே ரசிக்கிற மாதிரி, தலையைத் தலையை ஆட்டிக் கொள்ளு வார். அந்த வரிசை ரசிகர்களுக்கு, அடுத்த பத்தாவது நிமிடம் இந்த மனிதர் மறுபடி முட்டியைத் தட்ட வந்து விடுவாரே என்ற கவலைதான் இருக்குமே தவிர, பாட்டைக் கேட்கவே தோன்றாது!

அடுத்த ரகம்தான் பத்திரிகை விமரிசகர் கள். மேடையில் பாடும் வித்துவான்கள் எத்தனை சாகவதமோ, அத்தனை சாகவதம் இந்த விமர்சகர்களும்! உண்மையைச் சொல்ல இவர்கள் தொழில் ஒரு 'நாளும் இடம் கொடாது.'' இன்றைக்குப் பரவாயில் லையே! ஆனா... இவர் இன்னும் நன்றாகப் பாடி நானே கேட்டிருக்கிறேன்!'' என்பார் கள். இவர்களுக்கு நடுவில் மாட்டிக் கொண் டீர்களோ, தொலைந்தீர்கள். காலமான, காலாவதியான வித்துவான்களில் தொடங்கி, இன்றைக்கு இருக்கிற பாடாவதி வித்துவான்களின் அந்தரங்க வாழ்க்கை வரை பேசி, உங்கள் செவிகளில் திணித்துத் தள்ளி விடுவார்கள்!

**உ**ள்ளேதான் நிம்மதியாகக் கேட்க முடியவில்லை என்று வெளியில் அமைதி யாகப் பாட்டுக் கேட்க வந்து நின்றால், ஒரு கும்பலே அங்கே வட்டமடித்துக் கொண் டிருக்கும். ஜூனியர், சப்–ஜூனியர் வித்து வான்கள், ஒதுக்கி வைக்கப்பட்ட வித்து வான்கள், இசை விற்பன்னர்கள், பாடத் தெரியாமல் இசையின் இலக்கணம் மட்டும் தெரிந்தவர்கள் என்று ஒரு கும்பல். இவர் கள் விமர்சனத்தை விட இன்னும் மோச மாகப் போட்டுக் கிழி கிழி என்று கிழித்து விடுவார்கள் — பேச்சில்.

''....பாகவதர் சபா செக்ரடரியைச் சட்டை பாக்கெட்டில் வைத்திருக்கிறார். தம் பாட்டைப் பற்றி என்ன கவலை அவருக்கு!'' என்பார் ஒரு ஜூனியர்.

''இந்த வருஷம் காவன்னாவுக்கு சாயந் தரக் கச்சேரிக்கு பிரமோஷன் ஆகியிருக் கிறது... போன வருஷம் இவர் பாடின லட்சணம் ஞாபகம் இருக்கிறதோ?... இந்த வருஷம்....'' — இதைச் சொல்லி முடிப்பதற் குள் சபா காரியதரிசி அந்தப் பக்கமாய் வருவார். எல்லாரும் கோரசாக நமஸ்காரம் சொல்லி, பல்லைக் காட்டுவார்கள்.

அவர் தலை மறைந்ததும், ''நீங்கள் சொல் லவே வேண்டாம். எனக்கே தெரியும்! சபா செக்ரடரியின் பெண்ணுக்கு அவர்தானே ட்யூஷன்!''

இப்படியே வெராந்தாவில் பேச்சுக் கச்சேரி தொடரும்.

ஏதோ ஒரு விதத்தில் பொழுதைப் போக்க வரும் இவர்களால், கச்சேரி கேட்க வரும் ஏதோ கொஞ்சம் பேருக்கும் பஞ்சம் ஏற்பட்டு வருகிறது.

**—எஸ். வி. கே.**

தமிழில்: **சாருகேசி**

**Laugh with SVK**
***அல்லயன்ஸ் வெளியீடு,***
**244, ஆர். கே. மடம் சாலை,**
**சென்னை — 600 004.**




''சமையலறைக்கு உள்ளேயும் ஒரு ஃபேமிலி ரூம் இருக்கே, எதுக்கு...?''

''அது, குடும்பத்தோடு மாவாட்டுகிற வங்களுக்கு சார்...!''

— கரடிகுளம் ஜெயா பாரதி ப்ரியா.

அலங்கார் A/c
12-30 P.M.
அனுரா·கா A/c
4 காட்சிகள் 1,4,7,10PM

மஹாராணி
கிருஷ்ணவேணி
3 காட்சிகள்

வசந்தி A/c
பகல் காட்சி
மற்றும்
தமிழகமெங்கும்

இசைஞானி
இளையராஜா
இன்னிசையில்

விவேக் சித்ரா
பொண்டாட்டி தேவை!

இப்படிக்கு
R.பார்த்திபன்

தயாரிப்பு
A. சுந்தரம்

ELEGANT

# எண்ணெய், பருப்பு விலை உயர்ந்து விட்டதே?


* 'கத்துக்குட்டி'


* மீண்டும் அணியில்


* 'எக்ஸ்பர்ட்'

* எல். மாறன், மேல்பட்டி.

? 'டுடே' கூட கல்கியைத் தி. மு. க. ஆதரவு பத்திரிகை என்று குறிப்பிட்டுள்ளதே?

! 'தி. மு. க. எதிர்ப்புப் பத்திரிகை கல்கி' என்று கோபப்படுவோர் தயவு செய்து கவனிக்க!

* எஸ். இராஜசேகரன், கொளப்பாடு.

? 'பத்திரிகைகளை ஒடுக்குகிற விஷயத்தில் எம். ஜி. ஆர். கத்துக்குட்டி; கருணாநிதி எக்ஸ்பர்ட்' என்கிறாரே, சோ?

! கத்துக்குட்டியோ, எக்ஸ்பர்ட்டோ யாரானாலும் ஜம்பம் சாயாது! பத்திரிகைகள் அப்படி ஒன்றும் நடுங்கி ஒடுங்கிப் போவதாகக் காணோம். அவை, சொல்ல வேண்டியதைக் கூற வேண்டிய நேரத்தில், சொல்லிக் கொண்டுதான் இருக்கின்றன.

* இல. மணிமூர்த்தி, கல்லிடைக்குறிச்சி.

? எண்ணெய், பருப்பு முதலியவற்றின் விலை உயர்ந்து விட்டதே?

! பட்ஜெட்டின் விளைவாக விலைவாசி உயரும் என்பது — கல்கி தலையங்கம் உள்பட — அனைத்துப் பத்திரிகைகளாலும் சுட்டிக்காட்டப்பட்டதுதான். இப்போது, 'விலைவாசி குறைய என்ன அதிரடி நடவடிக்கை எடுக்கலாம்?' என்று மத்திய அமைச்சரவை கூடி விவாதிக்கிறது. தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிக்கிற கதைதான்.

* அ. முஸ்தபா, தக்கோலம்.

? ஒவ்வொரு ஆண்டும் மே முதல் தேதியைப் பார்க்கும் போது என்ன நினைவு வரும்?

! தொழிலாளர் தினமாக மே முதல் தேதியை அறிவித்த அமெரிக்காவின் உன்னத நிலை; அப்படி அந்நாடு உயர்ந்ததற்கான காரணங்கள் — இரண்டும்தான்.

* கே. பாலமுருகன், வேங்கிக்கால்.

? பிரேமதாசா — பிரபாகரன் சந்திப்பு பற்றி....?

! அவருடைய உண்மை நிலை இவருக்குத் தெரியும்; இவரது உண்மை நிலை அவருக்குத் தெரியும். ஒளிவு மறைவின்றி இருவரும் பேசப் போவதில்லை என்பது அனைவருக்கும் தெரியும்.

* வெ. சீனிவாசன், கிள்ளை.

? சாம்பிட்ரோடாவை அமைச்சர் உன்னி கிருஷ்ணன் கடுமையாக விமர்சித்து வருகிறாரே?

! அதனால்தானோ என்னமோ, 'லாயக்குப் பட மாட்டார்' என்று அந்தத் துறையிலிருந்து உன்னி கிருஷ்ணனைக் கழற்றி விட்டு வேறு துறையில் இணைத்து விட்டு விட்டார் பிரதமர்.

* ஜான்ஸி நாதன், அலங்கியம்.

? சென்ற இதழ் பதில்கள் பகுதியில் சிகரெட்டுக்கு எதிராக அரசு பிரசாரம் நடத்துவதுதான் சரியான வழி என்றும் மற்றொரு பதிலில் மதுவினால் ஏற்படும் தீமைகள் பற்றிப் பிரசாரம் செய்யத் தமிழக அரசு ஐந்து கோடி ஒதுக்கத் தயார் என்பதைக் குறை கூறியும் உள்ளீர்களே, ஏன் இந்த முரண்பாடு?

! அட ஆண்டவனே, இப்படியும் ஒரு கேள்வியா? 'மலிவு விலை சிகரெட்டை மத்திய அரசு உற்பத்தி செய்து, விநியோகிக்க வேண்டும்' என்று எழுதினால் ஒருவேளை முரண்பாடு இல்லை என்று மகிழ்ச்சி அடைவீர்களோ என்னமோ! சிகரெட், மது இரண்டும் மக்களுக்குத் தீமையே. சிகரெட்டுக்கு இன்று தடையில்லை. ஆனால் மத்திய நிதி அமைச்சர் சிகரெட்டுக்கு வரி அதிகரித்து அதன் மூலம் சிகரெட் பிடிக்கும் தீய

பழக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்று எண்ணுகிறார். இது நடக்காத காரியம் என்கிறோம். சிகரெட்டைத் தடை செய்ய முடியவில்லையெனில் சிகரெட் விளம்பரங்களையாவது தடை செய்யுங்கள்; புகை பிடிப்பதின் தீமையை எடுத்துரைத்துப் பிரசாரம் செய்யுங்கள் என்கிறோம். தமிழ் நாட்டைப் பொருத்தமட்டில் மதுவிலக்கு ஏற்கெனவே அமுலில் இருந்தது. அதைத் தீவிரமாக அமுல்படுத்துவதற்குப் பதில், முதல்வர் கருணாநிதி, மலிவு விலை சாராயத்தை அரசே தயாரித்து விநியோகிக்க முடிவெடுத்து, பிறகு, 'மதுவின் தீமை பற்றிய பிரசாரத்துக்கு அரசு நிதி ஒதுக்கத் தயார்' என்கிறார். இது மக்களின் கண்களை அரசே குருடாக்கிய பிறகு, சூரிய நமஸ்காரத்தின் சிறப்பை அவர்களிடையே பிரசாரம் செய்வதற்கு ஒப்பாகும் என்கிறோம். இந்த நிலைகளில் முரண்பாடு இருப்பதாக நீங்கள் கருதினால் உங்களுக்காக வருத்தப்படுவது தவிர, வேறு ஒன்றும் செய்வதற்கில்லை.

* என். வி. உச்சிமாகாளி, தஞ்சை.

? "சந்திரசேகரைப் பிரதமராக்கி காங்கிரஸ் — ஜனதாதளம் கூட்டணி ஆட்சி" — சுப்பிரமணிய சுவாமியின் யோசனை பற்றி?

! இதுபோன்ற ராஜ் நாராயணத்தனங்கள் இன்று செல்லுபடியாகாது.

* டி. சீனிவாசன், சென்னை.

? இந்திய அணியில் ஸ்ரீகாந்த் மீண்டும் இடம் பெற்றுள்ளதைக் கவனித்தீரா?

! அணியில் இடம் பெற்றதில் சந்தோஷம். ரசிகர் மனத்தில் நீங்காத இடம்பெறும் அளவுக்கு வெளுத்து வாங்கினால் இன்னும் சந்தோஷம்! அந் நிலையும் கைகூட வாழ்த்துவோம்.

* சாந்தன், கடலூர்.

? சமீபத்தில் தங்களை எரிச்சல் அடைய வைத்த செய்தி...?

! காவிரிப் பிரச்னையில் நடுவர் குழு அமைக்க வேண்டும் என்று பிரதமரைக் கேட்டுக் கொள்ளத் தமிழக எம். பிக்கள் ஒன்றாகச் சேர்ந்து போகாமல், கட்சிக் கண்ணோட்டத்துடன் தனித்தனியே சென்றது எரிச்சலைத்தான் தந்தது. பொதுவான பிரச்னையில் கருத்து மாறுபாடு இல்லாத போது, ஒருமித்த குரலை எழுப்பியிருக்க வேண்டாமா? இதற்கு முட்டுக்கட்டை போட்ட அ. இ. மு. க. தலைமையும் இ. காங்கிரஸ் தலைமையும் கண்டனத்துக்குரியனவாகின்றன.

* ...பற்றி?

* சந்திப்பு...



* ராஜ்நாராயணத்தனம்



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

**அ. முஸ்தபா,**
**14/B, ராஜம் பேட்டைத் தெரு,**
**தக்கோலம் — 631 151.**

* கே. ரமேஷ்ராம், செங்குன்றம்.

? "நாட்டின் ஒற்றுமையைக் காக்க என் உயிரையும் கொடுக்கத் தயார்" என்ற வி. பி. சிங் பேச்சைப் பற்றி?

! இப்படி உணர்ச்சிவசப்பட்டு பேசுவதால் மட்டும் பிரச்னை தீர்ந்து விடாது. முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும். பாகிஸ்தானில் உள்ள பயங்கரவாதிகள் பயிற்சி முகாம்களை மட்டும் குறிவைத்து நமது விமானப்படைத் தாக்குதல் நடத்தி, அதனைத் "தற்காப்புக்காக" என்று நியாயப்படுத்தலாம். சண்டிகர் பிரச்னை, கால்வாய்ப் பிரச்னை போன்ற பல பிரச்னைகளில் பஞ்சாபியருக்கு நியாயம் கிடைக்கச் செய்யலாம். 'இந்தியா என்ற மாபெரும் தேசமே உங்களுக்குச் சொந்தமாக இருக்கும்போது சின்னஞ்சிறு காஷ்மீர் அல்லது பஞ்சாபுக்கு மட்டும் ஏன் ஆசைப்படுகிறீர்கள்?' என்பது போன்ற வலுவான பிரசார யுக்திகளைக் கையாளலாம். மான் போன்ற செல்வாக்கு மிக்க மிதவாதிகளை இனம் கண்டு கொண்டு, அவர்கள் உதவியுடன், விரைவில் தேர்தல்கள் நடத்தவும் அரசியல் தீர்வு காணவும் முயற்சி செய்யலாம். பிரதமர் [illegible]வும் யோசித்து சிறப்பாகச் செய[illegible] என்று நாடே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.

* எம். விஜயா, பையூர்.

? 'ஜனதா தளக் கட்சியின் [illegible] பதவிக்குப் போட்டியிட மாட்டேன்' [illegible] சந்திரசேகர் கூறியுள்ளது பற்றி?

! ஆமாம். பதவி என்று இருந்தால் பொறுப்பு இருக்குமே. இப்போது மாதிரி ஆட்டம் போட முடியாதே!



# புதுப் பாடகன்

புதுப் பாடகன்! இதிலே புதுசையும் காணோம்; பாடகனையும் காணோம். தலைப்பைக் கண்டு ஏமாந்து சங்கீதக் கனவுகளோடு போனால் தலையிலடித்துக் கொண்டு திரும்ப வேண்டியதுதான்.

வேட்டையாடு, விளையாடு என்று விஜயகாந்தை இஷ்டத்துக்குப் பாய்ந்து தாக்க வைத்திருக்கிறார்கள். அந்தத் தடலடி விஜய்யை மறந்து விட்டால் காதல் கனிரசமும் சோக ரசமும் வாகாகப் பிழிந்து கொடுத்திருக்கிறார் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஒரு குறிப்பிட்ட கட்டம்:

புது மணமகளான தன் தங்கை, புருஷனுக்கு ஏதோ ஆபத்து; உடனே வர வேண்டும் என்று கடிதம் எழுத, அவசரமாய்ப் புறப்பட்டுச் சென்றவர், தங்கையின் கணவனை மீட்கும் நெருக்கடியில் ஆறு மாதச் சிறைவாசம் அனுபவித்து விட்டு, ஆசை ஆசையாய்க் காதலியைக் காணத் திரும்பினால் — இடையில் நேரிட்ட குளறுபடியில் காதலி மாற்றான் மனைவியாகி, வளர்த்த அண்ணன் அண்ணியிடம் விடை பெற்றுப் பணக்காரக் கணவனுடன் பயணப்பட்டிருப்பதைப் பார்க்க நேரிடுகிறது. இந்த இடத்தில் அந்தக் கிராமத்துக் காதலனின் மனோபாவமோ, ரியாக்ஷனோ இப்படியா இருக்கும்? விஜயகாந்த் தப்பில்லை; டைரக்டருக்கு எட்டவில்லை.

அது சரி, அமலாவுக்கு என்ன ஆச்சு? ஒரேயடியாய் இப்படி வத்தலும் தொத்தலுமாய்...? பிடிவாதமாய்ச் சொந்தக் குரலில் பேசிப் பாஸ் மார்க் வாங்கி விட்டார். கூடை மல்லிகையைக் கொண்டையில் சுமந்து அவர் காட்டும் காதல் கலகலப்பைக் காட்டிலும் வெள்ளைப் புறாவாய் வேதனை சுமந்து அவர் விடும் மௌனக் கண்ணீரில் மனசுக்குள் இறங்குகிறார்.

டாக்டர் மாமனார் ராதாரவி, "அந்த மனநோயாளிக்காக உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன் அம்மா. ஒரே ஒரு தடவை அவன் முன்னால பூவும் பொட்டுமா வா," என்றதும் தாங்க முடியாமல், "தெய்வமே, என்னை ஏன் இப்படிச் சோதிக்கறே?" என்று தூணிலே நெற்றியை மோதிக் கொண்டு திரும்ப, டாக்டர் புன்னகைத்து, "அந்தத் தெய்வமே உனக்கு உத்தரவு கொடுத்திருக்கு. நீயே கண்ணாடியிலே உன் முகத்தைப் பார்," என்றதும் அவர் கண்ணாடி பார்க்க, மோதிக் கொண்டதில் நெற்றியில் பட்ட காயம் குங்குமப் பொட்டுப் போல் துலங்குவது நயம்.

சந்திரசேகர் — ராஜலட்சுமி தாம்பத்யம் படு குடும்பப்பாங்கு. விஜயகாந்த் வாழ்க்கை வெறிச்சோடிப் போனது தன்னால்தானே என்ற வேதனையைச் சந்திரசேகர் வெடிப்பிலும் துடிப்புலுமாய்க் காட்டி நடிப்பு முத்திரை குத்தியிருக்கிறார்.

பேபி — வயசுக்கு மீறின பேச்சுப் பேசும் வழக்கமான சினிமாக் குழந்தைதான் என்றாலும், நடிப்பு முற்றாத பருவமாய்த் தெரிவதாலோ என்னவோ அதிகம் எரிச்சல் மூட்டவில்லை.

மருமகள் வந்த வேளை தன் மனைவியையும் அடுத்து மகனையும் வாரிக் கொடுக்க நேர்ந்ததே என்று பழி போடாமல், அவள் நிலைக்கு இரங்கிப் பாசம் காட்டுவதும் காதலனின் மனநிலையைக் குணப்படுத்தப் பாடுபடுவதும் ராதாரவியை எங்கேயோ உயர்த்தி விடுகிறது.

இத்தனை வளம் கொழிக்கும் வண்ணத் தோரணங்களாய் நம் நாட்டுக்குள்ளே பூமி இருக்கிறதே! அப்பப்பா! நெஞ்சை அள்ளுகிறது. அதே சமயம் நீ மிதியே கதி என்று திகிலோடு பார்க்கும் போது, ஏதோ கத்தி போடுவது ஒரு சம்பிரதாயமாம் — பட்டாகத்தியால் கீறி பச்சை ரத்தம் பரிமாறி பக்தி காட்டுகிறார்கள் பாருங்கள்! மூட நம்பிக்கையைப் படம் பிடிக்கும் மடத்தனம். கொடூரங்களுக்கு எதிராகக் குரல் கொடுப்பதென்றால் கூட அவற்றைக் காட்ட வேண்டிய அவசியம் இல்லையே!

கலைப் புலி தயாரிப்பாம். அமலா — விஜய் ஆரம்பக் காதல் பவனியில் கலை தெரிகிறது; அப்புறம் புலி புகுந்து ரத்தக் களரி — ரணக்களரி ஆக்கிப் போட்டு விட்டுப் போய் விடுகிறது.

— பி. எஸ். எஸ்.



"பாக்கெட் சாராயத்தை எதிர்த்துப் போராடறீங்களே, மதுவிலக்குதான் உங்க கொள்கையா?"

"அது இல்லைங்க. பாக்கெட்டுல கொடுத்தா பத்தாது, பக்கெட்டுல கொடுங்கன்னு கேட்கிறோம்!"

— நெ. அன்புசெழியன்.

ஆசிரியர்: வரவர சோம்பேறித்தனம் ஊர்ல ரொம்ப ஜாஸ்தியாப் போச்சு!

துணை ஆசிரியர்: ஏன் இப்படி அலுத்துக்கறீங்க?

ஆசிரியர்: பின்னே, பழைய கதைகளைக் காப்பியடிச்சு எழுதி அனுப்பிக்கிட்டிருந்த எழுத்தாளர், இப்ப, ஜெராக்ஸ் எடுத்தல்லவா அனுப்புகிறார்!

— லலிதா செல்லப்பா.





"உனக்கு வேலை கொடுத்தால் என்ன செய்வே? கொடுக்காட்டி என்ன செய்வே?"

"வேலை கிடைச்சா, 'முதல் சம்பளம் வாங்கினதும் திருப்பித் தர்றேன்'னு சொல்லி நூறு ரூபா கடன் கேட்பேன்; இல்லாட்டி ஊருக்குத் திரும்பிப் போக, செலவுக்கு ஐம்பது ரூபா கேட்பேன்!"

— வி. ரேவதி.

"அவசரமாகத் தெலுங்கு கத்துக்கிறியே. ஏன்?"

"பக்கத்துப் போர்ஷனில் ஆந்திராவிலிருந்து தம்பதிகள் குடிவந்திருக்காளே. கணவன் – மனைவி சண்டையைப் புரிஞ்சுக்கிட்டு ரசிக்கத்தான்!"

— லலிதா செல்லப்பா.





மானேஜர்: எனக்கு ஒரு சத்தியம் பண்ணிக் குடுங்க!

கிளார்க்: என்னன்னு, சார்?

மானேஜர்: என்னை, விட... 'அதிகமா...? வாங்க மாட்டேங்கன்னு...!'

— ஆர். அப்துல் சலாம்.

# சிகரெட் பழக்கத்துக்குச் சினிமாவும் காரணம்!

* இன்றைய அரசு எப்படி பாலிடில் கருத்துக்களுடன் செயல்பட்டு, நெகடிவ் கருத்துக்களைத் தவிர்த்து, முன்னேற்றப் பாதைக்கு மக்களை அழைத்துச் செல்ல வேண்டும் என்பதை விளக்கிய தலையங்கம் வித்தியாசமான கோணத்தில் சிறப்பாக அமைந்திருந்தது.

சென்னை — 41. வி. ஏ. ராஜு.

* கால்குலேட்டரைத் தோற்கடிக்கும் ஸ்ரீனிவாச வாசுதேவன் நிச்சயமாய் ஸ்ரீனிவாச ராமானுஜனாவான்! அவனைப் போன்ற அறிவுமிக்க சிறுவர்களை அரசோ அல்லது கல்வி நிறுவனங்களோ தத்தெடுத்துக்கொண்டு படிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் உதவ வேண்டும்.

ஸ்ரீரங்கம். முகில்குமார்.

* வரதட்சணை வேண்டாம் என்று சொன்ன போது உயர்ந்து நின்ற மூர்த்தியின் மாப்பிள்ளை, சிதிலமடைந்த ஆலயத்தின் புனருத்தாரணத்திற்கு அதில் ஒரு பகுதியைச் செலவு செய்யச் சொன்ன இடத்தில் பல மடங்கு உயர்ந்து விட்டார். ஒரு அருமையான யோசனையை எளிமையாக, ஆனால் வலிமையாகச் சொன்ன சிறுகதை சத்யா ஸ்ரீனிவாசனின் 'வரதட்சணைப் பணம்'

திருப்பரங்குன்றம். டி. கே. சுப்பிரமணியன்.

* 'வரதட்சணைப் பணம்' என்ற கதையில், மாப்பிள்ளை வரதட்சணை வேண்டாம் என்றது எல்லாம் மிக நல்ல கொள்கைதான். ஆனால் பாழ்ப்பட்ட கோவிலைப் புதுப்பிக்க மணப்பெண்ணின் தகப்பனார்தான் பணம் கொடுக்க வேண்டுமா?

மாப்பிள்ளையும் தம் பங்குக்குக் கொஞ்சம் பணம் போட்டிருக்கலாம் அல்லவா...?

சென்னை — 4. டி. எம். சுந்தரராமன்.

* 'என்றும் இளமையாய் இருப்பது எப்படி?' இலவச இணைப்பு கண்டேன்! படிக்கப் படிக்கப் பத்து வயது குறைந்தாற் போல், மிகுந்த தன்னம்பிக்கையை ஊட்டும் விதத்தில் இருந்தது!

திருச்சி — 16. ஞானஜெயந்தன்
எஸ். ராஜகோபால்.

* வயோதிகம் பற்றிய எனது பயமே 'சந்தியாராகம்' என்று தமது டெலிவிஷன் படம் பற்றி பாலுமகேந்திராவின் பேட்டி ஒருபுறம்...! என்றும் இளமையாய் இருப்பது எப்படி? என்ற இலவச இணைப்பு ஒருபுறம்...! சரியான காம்பினேஷன்தான்!

மேல்பட்டி. எல். மாறன்ஜி.

* இன்றைய இளம் தம்பதிகளின் இயந்திர வாழ்க்கையின் விளைவாக ஏற்படும் கருத்து மோதல்களையும், அவற்றைத் தொடர்ந்து வரும் பாசமிக்க நேரங்களையும் மிக யதார்த்தமான நடையில் எடுத்துரைத்திருந்தார் "மீண்டும் ஒருமுறை" கதாசிரியர்! அக்கதை படித்து மனம் மிக்க நிறைவடைந்தது!

புழல். எஸ். செல்லத்தாய்.

* 'பாட்டியின் பாடலில் எத்தனை குறும்பு!' படித்து ரசித்தபடி அதற்கான கார்ட்டூனைப் பார்த்த போது தான் ஓவியர் நடனத்தின் குறும்பும் புரிந்தது. பாவம் பாட்டி! சாப்பிடவில்லையே என்று அவர் கையில் ஒரு வாழைப்பழத்தைக் கொடுத்திருந்தார்!

மங்கைநல்லூர். ஆர். செல்வராணி.

* புகை பிடிப்பது தற்கொலைக்குச் சமானம் என்ற வகையில் இவ்வார இதழ் அட்டைப்படம் வெளியிடப்பட்டுள்ளது அருமை! இத்தகைய எச்சரிக்கைக்கட்டுரைகள் தொடரட்டும்.

மதுரை — 7. எஸ். திருமலை.

* கிருஷ்ணாவின் 'இன்னொரு பக்கம்' — சிறுகதை இரண்டு பக்கங்களேயானாலும், யதார்த்த நிலையினை உணர்த்துவதாய் அமைந்திருந்தது. உசந்தி (உச்சர்)யைப் போல் பலரும் முன்வந்தால் கிராமங்களிலும் படிப்பு வாசனை பரவலாக வீசும்!

மதுரை — 1. பிரபாகர் ப்ரியன்.

* சிகரெட் அதிகமாக விற்பனையாவதற்கு விளம்பர நிறுவனங்கள் மட்டுமே காரணமல்ல. சினிமாவில் வரும் கதாநாயகர்கள் ஸ்டைலாக சிகரெட் பிடிப்பதைப் பார்த்து மயங்கி, அதிகம் படிப்பறிவில்லாத ரசிகர்கள் அந்தத் தீய பழக்கத்துக்கு ஆளாகி விடுகின்றனர். வீட்டில் பெரியவர்கள் சகஜமாக புகைபிடிப்பதால் குழந்தைகளுக்கு அதன் பயங்கரப் பின்விளைவுகள் புரிவதில்லை. தாம் மிகவும் பாசமும் நம்பிக்கையும் வைத்துள்ள ஒருவர் செய்யும் காரியம் தவறு என்று மனம் ஒப்புக் கொள்ளாது. அதேபோல், இளைஞர்களானாலும், நண்பர்கள் புகைப்பதைப் பார்த்தும், அவர்களுடைய கேலிக்குப் பயந்தும் இந்தப் பழக்கத்தை உண்டாக்கிக் கொள்கிறார்கள். பெற்றோர்கள்தான் குழந்தைகளுக்கு மனஉறுதியை வளர்த்துக் கொள்ள உதவி, 'சிகரெட் எனக்கு வேண்டாம்' என்று தைரியமாகச் சொல்லும் பக்குவத்தை வரவழைக்க வேண்டும்.

சென்னை — 87. டாக்டர். தெய்வச்சிலை.

* நான் தினமும் கல்லூரிக்குச் செல்லும் வழியில், கெல்லிஸிலுள்ள சிறுவர்களின் இல்லத்தைப் பார்ப்பேன். மழலைக் குழந்தைகளெல்லாம் மகிழ்ச்சியாய் விளையாடிக் கொண்டிருக்கும். உங்கள் இதழைப் படித்தவுடன்தான் அவர்கள் விடுதியில் இவ்வளவு கஷ்டங்கள் உள்ளனவா என்று வருத்தம் அடைந்தேன்.

வியாசர்நகர். கண்ணன்.

* 22.4.90 நாளிட்ட கல்கி இதழில் வெளிவந்துள்ள "சமூகநலத் துறையா? சமூக விரோதத் துறையா?" என்ற கட்டுரையைப் படித்துப் பார்த்தேன். 19.4.90 அன்று காலை அரசு ஆதரவற்ற குழந்தைகள் பராமரிப்பு இல்லத்திற்குச் சென்று பார்வையிட்டு, விவரங்களைக் கேட்டறிந்தேன். இன்று பாடி ஜெனாய்நகர் அரிமா சங்கத்தினருக்கு அனுமதிக் கடிதம் அனுப்பப்பட்டு விட்டது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

விடுதி அமைந்திருக்கிற கட்டடம் தனியாருக்குச் சொந்தமான வாடகைக் கட்டடம். வீட்டு வாடகைக் கட்டுப்பாடு சட்டத்தின் கீழ், சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர் இக் கட்டடத்தைப் பராமரிப்பு இல்லத்திற்கு ஒதுக்கியிருக்கிறார். அக் கட்டடத்தின் உரிமை பற்றி நீதிமன்றத்தில் வழக்கு நடைபெறுகிறது. இந்த நிலையில் மாவட்ட ஆட்சித் தலைவருடன் தொடர்பு கொண்டு பல்வேறு சட்டப் பிரச்னைகளையும் ஆய்ந்துதான் முடிவு எடுக்க இயலும். இவ்வாறான நிர்வாகக் காரணங்களால் காலதாமதம் ஏற்படுவது தவிர்க்க இயலாததாகி விடுகிறது.

சென்னை — 35. இரா. வரதராஜுலு
(சமூகநல இயக்குனர்).

**4** | ஆரோக்கிய ரகசியம்: வி. என். குமாரசாமி



# இரட்டிப்புப் பலன் பெற

**யோ**காசனங்களின் மகிமைகளை நம்மைவிட மேல்நாட்டார் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள்! பல்கலைக் கழகங்களில் அதற்கான தனிப்பிரிவு ஏற்படுத்தி, விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்து முடிவுகளை வெளியிடுகிறார்கள். மருத்துவக் கழகங்களில் விவாதிக்கிறார்கள். ஆரோக்கியக் கேந்திரங்களில் கற்றுத் தருகிறார்கள். 'நம் நாட்டில் இந்த நாள் என்று வருமோ?' என்று ஏங்கத்தான் வேண்டியிருக்கிறது. யோகாசனப் பயிற்சி பெற்ற நிபுணர்களைப் பள்ளிக்கூடங்களில் சிறுவர் சிறுமியருக்கு ஆசனம் போடக் கற்றுத்தர நியமித்தால், போகப் போக அரசு மருத்துவமனைகளில் கூட்டம் கணிசமாகக் குறைந்துவிடும்!

நம் நாட்டிலேயே யோகாசன மகிமையை அறிந்த பிரபலஸ்தர்கள் சிலர் இருந்திருக்கிறார்கள். அவர்களில் நேருஜி ஒருவர். ஸர். ஸி. பி. ராமசுவாமி அய்யர் மற்றொருவர்.

வின்ஸர் கோமகனைத் தெரியுமா? காதலிக்காக பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே விட்டுக் கொடுத்து, தமது தம்பி, ஆறாம் ஜார்ஜ் அரசராகப் பதவி ஏற்க அனுமதித்தவர் அவர். அவரும் அவரது காதல் மனைவியும் நாள் தவறாமல் யோகாசனம் பயின்றார்கள்.

இந்த எடுத்துக்காட்டுக்களைக் கூறினால், 'அவர்களைப் போல நாமும் பழக வேண்டும்' என்ற எண்ணம் ஏற்படும் அல்லவா? அதற்காகச் சொன்னேன். "சரி, முன்னுரையாகவே பல விஷயங்களைக் கூறிக் கொண்டு போகிறீர்களே, விஷயத்துக்கு வாருங்கள். யோகாசனங்கள் பழகக் கற்றுக் கொடுங்கள்" என்று சில வாசகர்கள் முணு முணுக்கலாம். அதற்காகத்தான் சென்ற வாரம் பத்மாசனம் பற்றி எழுதினேன்.

ஆனால், முன்னுரை விஷயங்கள் — அவை நீளமாக வளர்ந்த போதிலும் — அவசியம் தான். அவற்றைப் புரிந்து கொள்ளாமல் ஆசனம் பழக ஆரம்பிக்கக் கூடாது.

**உ**தாரணமாக ஆசனங்களை நான் எந்த வரிசைப்படி எழுதி வருகிறேனோ, அந்த வரிசைப்படிதான் செய்துவர வேண்டும். வரிசை மாறிப் பழகக் கூடாது. இது ரொம்ப முக்கியமான அம்சம். அப்புறம் ஆசனங்களை எப்போது செய்வது, எந்தச் சூழ்நிலையில் செய்வது என்பது போன்ற விஷயங்கள். 'எனவே, இந்தத் தொடரில் எழுதப்படும் ஒவ்வொரு வரியும் உங்கள் கவனத்தைக் கவர வேண்டிய அத்தியாவசியமான அம்சங்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

இப்படிச் சொன்ன உடனே, "அவ்வளவு





கஷ்டமானால் நமக்கு வேண்டாம்.'' என்று சிலர் ஒதுங்கக் கூடும். இது தவறு. முக்கிய மான விஷயம் என்றாலும் எல்லாமே மிக எளிமையான அம்சங்கள்தாம். மறந்து விடா மல் கவனமாக இருக்க வேண்டும் என்பது தவிர, வேறு சிரமம் இல்லை.

ஆசனம் பழகும் அறை காற்றோட்டமாக வும் சுத்தமாகவும் இருக்க வேண்டும். ஒட் டடை தூசி இன்றிச் சுத்தமாகப் பெருக்கித் துடைக்கப்பட்டிருக்க வேண்டும். ஜன்னல் களைத் திறந்து வைக்க வேண்டும். அக்கம் பக்கத்தில் யாராவது பார்ப்பார்கள் என்று கூச்சமாக இருந்தால் கீழ்ப் பகுதி ஜன்னல் களை மட்டும் மூடி மேல் ஜன்னல்களைத் திறந்து வைக்கலாம். மொட்டை மாடி இருந் தால், அங்கே செய்யலாம்.

மெத்தைவிரித்துக்கொண்டுயோகாசனம் செய்யக் கூடாது. மிருதுவான கனமான ஒரு விரிப்பு இருந்தால் போதும் — படுக்கை சுற்றும் ஜமுக்காளம் போல. அல்லது ஒரு பெரியபெட்ஷீட்டை நான்காக மடித்து விரித் துக்கொள்ளலாம். ஆண்கள், உடலை ஒட்டி னாற்போல் ஜட்டி அணிந்து கொள்ள வேண்டும். ரொம்ப இறுக்கவும் கூடாது; தொள தொளவென்றும் இருக்கலாகாது. கவ்விப் பிடித்தது போல் சரியான அளவில் இருக்க வேண்டும். பெண்கள் பைஜாமா, குர்த்தா போன்ற உடை அணியலாம். இதற்கு வெட்கமாக இருந்தால் புடைவை ரவிக்கை அணிந்தபடியே கூடச் செய்ய லாம்!

**ஆ**சனங்களை அதிகாலையில் செய் வது நல்லது. காலைக் கடன்களை முடித்த பிறகு, வயிறு காலியாக இருக்கும் போது செய்ய வேண்டும். சிலருக்குக் காலையில் செய்ய முடியாமல் ஐந்து மணி ஷிஃப்ட், ஆறு மணி ஷிஃப்ட் என்று ஓட வேண்டி யிருக்கும். அவர்கள் மாலையில் செய்யலாம். ஆனால் வயிறு காலியாக இருக்க வேண் டும். ஆசனம் செய்பவர்கள் எப்போதுமே மிதமாக உணவருந்த வேண்டும். உணவருந்தி குறைந்தபட்சம் ஐந்து மணி நேரத்துக்குப் பிறகு ஆசனம் பழகலாம். காப்பி, டீ போன்ற வற்றைத் தவிர்த்து, பால் அல்லது மோர் அருந்தலாம். சிகரெட், மது போன்ற போதைப் பொருள்களை நெருங்கவே விடக்கூடாது. இவற்றுக்கு ஏற்கெனவே அடிமையான வர்கள் அந்த அடிமைத்தனத்திலிருந்து மீள, மனோபலத்தையும் உடல் உறுதியையும் ஆசனங்கள் மூலம் பெற முடியும். பாலோ, மோரோ நீராகாரமோ சாப்பிட்டிருந்தால் குறைந்தபட்சம், இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு ஆசனம் செய்யலாம்.

**இ**வை உடலைப் பற்றிய விஷயங்கள். இனி மனம். 'மனம் ஒரு குரங்கு' என்பது ரொம்ப சரி. அது இங்கும் அங்கும் அலை பாய்ந்து கொண்டிருக்கும். வேண்டாத சிந்த னைகள் வந்து சேரும். கோப தாபச் சிந்தனை கள், பொறாமை உணர்வுகள் முதலிய வற்றை ஒதுக்க வேண்டும். ஆபீஸில் ஏதா வது நடந்திருக்கும். 'அவன் என்னைக் கெடுத்து விட்டானே; கவிழ்த்து விட்டானே' என்று தோன்றும். அல்லது சினிமாவில் பார்த்த டூயெட் காட்சிகளோ, நைட் கிளப் நடனமோ நினைவுக்கு வரும். இவையெல் லாம் தீய சிந்தனைகள். உடலையும் உள்ளத் தையும் கெடுக்கும் யோசனைகள். யோகா சனம் பழகும் போது தீய சிந்தனைகளிலி ருந்து விடுதலை பெற நாம் பழக வேண்டும். அப்போது யோகாசனம் பழகாத மற்ற நேரங் களிலும் மனத்தூய்மையுடன், அமைதியான சாந்த நிலையில் விளங்க நமக்கு இயல்பா கவே சக்தி பிறந்துவிடும்!

யோகாசனம் பயிலும் போது வேண்டாத சிந்தனைகளை எப்படி ஒதுக்குவது? நல்ல சிந்தனைகளை வரவழைத்துக் கொள்வதன் மூலம்தான்! உதாரணமாக, சென்ற வாரம் குறிப்பிட்ட பத்மாசனத்தில் பத்து நிமி ஷமோ, ஐந்து நிமிஷமோ இருப்பதாக வைத் துக் கொள்ளுங்கள். அந்த ஐந்து நிமிஷமும் உங்களுக்குப் பிரமோஷனை மறுத்துவிட்ட மேலதிகாரியைச் சபிப்பதிலேயே கழித்தீர்க ளென்றால் பத்மாசனத்தினால் ஒரு பயனு மில்லை! அந்த ஐந்து நிமிஷங்களும் கட வுளைத் தியானிப்பதில் செலவிட்டால் பத்மாசனத்தின் பயன் இரட்டிப்பாகும்! உடலுடன் உள்ளமும் தூய்மை பெறும்; பலம் பெறும். கண்களை மூடி, நீங்கள் எந்தக் கோயிலுக்குப் போகிறீர்களோ அந்தக் கோயில் சந்நிதியை மனக்கண் முன் கொண்டு வந்து நிறுத்துங்கள். உங்களுக்குத் தெரிந்த சுலோகங்களை நிதானமாக மனசுக் குள் கூறுங்கள். மௌனமாகத் திருப்புகழ் அல்லது தேவாரம் சொல்லுங்கள். தப்பித் தவறி நீங்கள் கடவுள் நம்பிக்கை இல்லாதவ ராயின் உதயசூரியனின் எழிலை மனத்திரை யில் பார்த்து ரசிக்கலாம். ''ஆதவனே! எல்லா உயிர்களுக்கும் ஆதி காரணமான வனே! உனக்கு வணக்கம்!'' என்று கூறி உரையாடலாம். மலைகள், ஆறுகள் என்று சிந்தித்து இயற்கை வழிபாடு நடத்தலாம். மாணவர்கள் மனப்பாடம் செய்ய வேண் டிய செய்யுள் பகுதிகளைச் சொல்லிப் பார்த் துக் கொள்ளலாம். மனம் நல்ல விஷயங் களில் லயிக்க வேண்டும் என்பதே முக்கி யம்.

யோகாசனம் உடலை வசப்படுத்துவது மட்டுமல்ல; மனத்தையும் வலுப்படுத்தி இருவித ஆரோக்கியம் அளிப்பதாகும்.

(தொடரும்



கவிதைக்குள் ஒரு கவிதை:

# தேரை நிறுத்தி மணிகளைக் கட்டியது ஏன்..?

வெளியூர் சென்ற இளைஞரான தலைவன் தனது பணிகளை முடித்துக் கொண்டு மணிகள் பூட்டிய தேரில் தனது காதல் தலைவியை எண்ணியவாறு மிக விரைவாகத் தேரைச் செலுத்தி வருகிறான். வழியில் இருமருங்கிலும் பூச்செடிகள் நிரம்ப மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அம்மலர்களில் வண்டுகள் தத்தம் காதல் நிறைந்த பெண் வண்டுகளுடன் உல்லாசமாய் அமர்ந்து தேன் குடிக்கின்றன. இதைக் கண்ணுற்ற தலைவன் தேரை நிறுத்தினான். அவன் மனம் கருணை கொண்டது. பிற உயிர்களுக்கு எவ்வழியிலும் தீங்கிழைக்க நினைக்காத பெருந்தன்மையான மனம்.

தேரை நிறுத்தி, தேரில் உள்ள ஒவ்வொரு மணியின் நாக்கையும் சிறு சிறு கயிறுகளால் கட்டுகிறான். மணியின் 'நா' அசையாது நின்றது. பின் திருப்தியுற்றவனாய்த் தேர் ஏறி, தன் காதலியை நாடிச் சென்றான்.

'தேரை நிறுத்தி மணிகளைக் கட்டியது ஏன்?' என்ற கேள்விக்குப் புலவர் தரும் விளக்கம்: 'சத்தமெழுப்பும் மணியினால் வண்டுகள் அஞ்சி ஓடக்கூடும்; எனவே, அவைகளுக்குக் கூட இடர் விளைவிக்க நினைக்காத தலைவன் மணியின் நாக்குகளைக் கட்டினான்!'

எவ்வளவு அருமையான சிந்தனை! அப்பெருமகனின் கருணைதான் எவ்வளவு உயர்ந்தது!

''பூத்த பொங்கர் துணையோடு
வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணி நா வார்த்த மாண்வினைத்
தேரன்
உவக்காண் தோன்றும்''

இறைவனின் கருணையைப் பெற விரும்பும் ஒவ்வொருவரும் பிற உயிர்களிடத்துக் கருணை காட்ட வேண்டும் என்ற ஒப்பற்ற கருத்தை, அழகிய எடுத்துக்காட்டுடன் நான்கே வரிகளில் அடக்கிய அற்புதமான ஓர் அகநானூற்றுப் பாடல் இது.

— ஏரல். எஸ். யோகா,
சென்னை — 82.

# அதிர்ச்சியை வெற்றியாக மாற்றியவர்



**ப**ஜாஜ் நிர்வாக இயல் கல்லூரியில் பயின்று வெளியே வந்து. அப்போதுதான் ரவி எம். டி. பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தார். முதலில் கேரளத்திலுள்ள விற்பனையாளர் ஒருவரைச் சந்திக்கத் தம் உதவியாளருடன் போனார். விற்பனையாளருக்கோ ஏகப்பட்ட குறைகள், ரவியுடைய எம். ஆர். எஃப். நிறுவனம் மீது. ரவிக்கு முன்னால் கொட்டித் தீர்த்து விட்டார்.

ரவி அதிர்ச்சி அடைந்து மௌனமாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டார். பிறகு தம் ஓட்டல் அறைக்குத் திரும்பி விட்டார். ரவியுடன் வந்த உதவியாளர், விற்பனையாளரிடம், ''ஏன் இப்படிப் பேசினீர்கள்? அவர் எங்கள் எம்.டி.; உரிமையாளரின் மகன். அவர் மனம் நோக, அவர் கம்பெனியைப் பற்றியே பேசினால் எப்படி இருக்கும் அவருக்கு?'' என்று கேட்டாராம்.

''அவர் உங்கள் கம்பெனி அதிகாரிகளில் ஒருவர் என்றல்லவா நினைத்தேன்! அவர் தான் உங்கள் முதலாளியா? ரொம்ப சாரி... அவர் எங்கே தங்கியிருக்கிறார்? நான் போய் அவரிடம் மன்னிப்புக் கேட்கிறேன்!'' என்றார் விற்பனையாளர்.

ஆனால் அதற்கு அவசியம் ஏற்படவில்லை. மாறாக ரவி, அந்த விற்பனையாளருக்கு நன்றி செலுத்தினார். ''நீங்கள் மனம் விட்டுப் பேசியதால்தான் எனக்கு இந்த நிறுவனத்தின் இயக்கத்தில் உள்ள சில குறைபாடுகள் தெரிய வந்துள்ளன. அவற்றைச் சரி செய்வதும் இனி சாத்தியமாகும். நான் கவனிக்கிறேன்'' என்றார்.

ரவியின் குணம் அதுதான்; பொறுமையுடன் உண்மையை அறியும் சுபாவம்தான். அதுதான் இன்றைக்கு எம். ஆர். எஃப்பை முதல்தர நிறுவனங்களுள் ஒன்றாக உயர்த்தியிருக்கிறது.

**ர**வி மம்மன் பொறுப்பேற்றுக் கொண்ட போது எம். ஆர். எஃப் தடுமாறிக் கொண்டுதானிருந்தது. அதனை நிலை பெறச் செய்ததுடன் மேலும் வளர்த்துக் காட்டியவர் ரவி. இதற்கு அவருடைய நிர்வாக ஆற்றலும் உற்பத்தி விநியோகத்தில் புதிய அணுகுமுறைகளைக் கையாண்டு பார்த்ததும் ஒரு காரணம்.

மற்றொன்று: ஒரு சமுதாயப் பணியையே ரொம்பப் பிரபலமடைய வைத்து, அதன் மூலமே நிறுவனம் பெரும் புகழும் பெறச் செய்ய முடியும்; அதுவே விற்பனை அதிகரிக்கவும் உதவும் என்று நிரூபித்துக் காட்டினார் ரவி.

கிரிக்கெட்டில் இந்தியாவில் உள்ள மத்தியதர வர்க்கம் முழுவதற்கும் ஈடுபாடு இருப்பதை உணர்ந்தார். மனோதத்துவ ரீதியாக இந்த ஈடுபாட்டைத் தமது நிறுவனத்துக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார். எப்படி? 'அதிவேகப் பந்து வீச்சாளர் அதிகம் பேர் இல்லை என்பது தானே இந்திய அணியில் உள்ள குறை? அதை நிவர்த்திப்போம்' என்று, ''எம். ஆர். எஃப். பேஸ் பவுண்டேஷன்'' நிறுவினார். டெனிஸ் லில்லியை நமது இளைஞர்களுக்குப் பயிற்சி அளிக்க அழைத்து வந்தார். அதற்கு ஏகப்பட்ட பப்ளிசிடி கிடைத்தது. அத்தனையும் எம். ஆர். எஃப் நிறுவனத்துக்கு விளம்பரமாகவும் மாறியது. நிறுவனத்தின் நற்பணியினால் மக்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி, விற்பனை பெருக உதவியது.

இவை போன்ற நூதன சிந்தனைகளும் யுக்திகளும் செயல்திறனும் இணையும் போதுதான் வளர்ச்சி வேகம் பெறுகிறது என்பதற்கு முப்பத்து ஒன்பது ஆண்டுகளே வாழ்ந்தபோதிலும் வெற்றிகளைக் குவித்த ரவி மம்மன் ஓர் எடுத்துக்காட்டு.

— சித்தார்த்.



மேடையில் ஒரு பேச்சாளர்
முழங்கினார்:
''குறைகளைத் தீர்க்கச் சொல்லி
பஸ் மறியல் செய்து —
போராடுவதற்காகவாவது, எங்கள்
ஊருக்கு ஒரு பஸ் விடும்படி,
அன்பவர்களைக் கேட்டுக்
கொள்கிறேன்!''

— கர்டிகுளம் ஜெயா பாரதி ப்ரியா



# காஞ்சியின் கருணைத் தெய்வம்

பரமாச்சாரியார், பீடாதிபதியான சில காலத்துக்குள்ளாகவே, பூர்வாசிரம ஊரான திண்டிவனத்துக்குச் செல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டது. ஊர் எல்லையில் பூர்ண கும்பத்துடன் காத்திருந்தவர்களில் முறுக்குப் பாட்டியும் ஒருவர்.

'முறுக்குப் பாட்டி'க்கு ஒரே படபடப்பு; நடுக்கம். பரமாச்சாரியார் வந்து பூர்ண கும்ப மரியாதையை ஏற்றுக் கொண்ட போது முறுக்குப் பாட்டியின் கண்களிலே நீர் முட்டி கன்னங்களில் வழிந்தது.

பெரியவாளின் வருகையால் எல்லோருக்கும் ஏற்பட்டதைக் காட்டிலும் முறுக்குப் பாட்டிக்கு அதிகமான உணர்ச்சிப்பெருக்கு ஏற்படக் காரணம் இருந்தது.

பூர்வாசிரமத்தில், இவர் முறுக்குப் பாட்டி வீட்டுக்கு அடிக்கடி போய், முறுக்கு கேட்டு வாங்கித் தின்பார். ஒருநாள் ஒரு முறுக்கு, இரண்டாவது முறுக்கு, மூன்றாவது முறுக்கையும் சாப்பிட்டு விட்டு, அடுத்து ஒன்று கேட்ட போது பாட்டி கொடுக்க மாட்டேன் என்று சொல்லி விட, இவர் அடம்பிடித்தபடி, "நீ முறுக்கு கொடுக்கா விட்டால், நான் உன் வீட்டுக்கே வர மாட்டேன்" என்று பொய்க் கோபத்துடன் கூறிய போது, பாட்டி சொன்னாள்: "நீ வராவிட்டால் போயேன்! உன்னைப் பூர்ணகும்பத்துடன் வரவேற்க நான் காத்துக் கொண்டிருக்கிறேனா என்ன?"

அந்த நினைவுகள் நெஞ்சில் மோத, முறுக்குப் பாட்டி உருகி நின்றார். பரமாச்சாரியாரோ அருள் கலந்த புன்னகையுடன் பூர்ணகும்ப மரியாதையை ஏற்றார்.

பீடாதிபதியான கையோடு, பரமாச்சாரியார் முதல் முறையாகக் கும்பகோணம் மடத்தில் பிரவசனம் செய்யவிருந்தார். சபை நிறைய பக்தர்கள் கூடியிருந்தனர். பதின்மூன்றே வயதான பால சன்னியாசி, தங்கு தடையின்றிச் சரளமாய்ப் பிரவசனம் செய்தார். கூட்டம் மெய்சிலிர்த்துப் போய், பிரவசனத்தில் லயித்தது. இறுதியில், அந்த ஆழமான அமைதியைக் கிழித்துக் கொண்டு ஒரு முதியவரின் குரல் ஒலித்தது.

"இந்தக் குழந்தை இத்தனை அற்புதமாகப் பிரவசனம் செய்கிறதே! எனக்கு வயசாயிடுத்தே! இந்தக் குழந்தையோட பிரவசனத்தை ரொம்ப நாள் கேட்கிற பாக்கியம் இல்லாம போயிடுத்தே!" என்று நாத்தழுதழுக்கக் கூறிக் கொண்டே சாஷ்டாங்கமாய்ப் பரமாச்சாரியாரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார் அந்த முதியவர்.

பரமாச்சாரியார் வடக்கே முகாமிட்டிருந்த போது, ஒரு நாள் திடீரென பிக்ஷை



* படித்த வால்டர் செகண்டரி பள்ளி — திண்டிவனம்.



* மாணவனாக....

(ஆகாரம்) எடுத்துக் கொள்ளாமல் இருந்து விட்டார். மறுநாள், மூன்றாம் நாள், நான்காம் நாள் என உபவாசம் தொடர்ந்தது. உடனிருந்தவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. "நாங்க ஏதாவது தப்பு செய்திருந்தால், பெரியவாள் மன்னித்து விடணும்; பெரியவாள் பிக்ஷை ஏற்றுக் கொள்ள வேண்டும்; பெரியவாள் உபவாசமிருப்பது எங்கள் எல்லாருக்கும் ரொம்பவும் மனக்கஷ்டமாய் இருக்கிறது" என்று கூறிய போது, "நீங்கள் யாரும் ஒரு தப்பும் பண்ணலியே! என் உபவாசத்துக்கு நீங்கதான் காரணம் என யார் சொன்னது? இங்கே வந்த முதல் நாளிலிருந்து தொடர்ந்து தினமும் பிக்ஷையில் ஒரு கீரை சேர்த்திருந்தீர்கள். மூன்று நாளும் தொடர்ந்து அதைச் சாப்பிட்ட போது, எனக்கே அந்தக் கீரை சுவையாய் இருக்கிறாற் போல, ஒரு லேசான உணர்வு ஏற்பட்டு விட்டது. அதற்குத்தான் நாலு நாள் உபவாசம்" என்று விளக்கமளித்தார் பரமாச்சாரியார்.

பரமாச்சாரியார் சுவைக்காக உணவு அருந்துவதை நிறுத்தி எத்தனையோ காலமாகி விட்டது என்பதை நன்கு உணர்ந்த அவரது சீடர்கள், அவர் தமது உபவாசத்தின் மூலம், இந்த உலக விஷயங்களுக்கு, அடிமைப்பட்டு விடக் கூடாது என்று தங்களுக்கு உணர்த்தியதாகவே எடுத்துக் கொண்டார்கள்.



* பீடாரோஹணம்.

* உலக நலனுக்காக நியம நிஷ்டைகள் காத்து...





* அபூர்வமான ஓய்வு நேரம்.

பரமாச்சாரியாரைக் காண வந்த ஒருவர், "எனக்குப் புரோபசராய்ப்

பிரமோஷன் கிடைத்திருக்கிறது...'' என்று கொஞ்சம் கர்வமும், சந்தோஷமும் கலந்த குரலில் தெரிவித்தார். அப்போது பரமாச்சாரியார் கூறிய இரண்டே வார்த்தைகள்: ''என்ன படிச்சிண்டிருக்கே?'' எத்தனை பெரிய அறிஞர்கள் என்றாலும் கூட கற்றது கை மண்ணளவுதான் என்பதைப் பரமாச்சாரியார் தம்மைச் சந்திக்க வந்தவருக்கு உணர்த்திய சம்பவம் இது!

ஒரு வேத பண்டிதர் பரமாச்சாரியாரிடம் வந்து, ''வித்வான்கள் கூடும் ஒரு சபையில் ராமாயண உபன்யாசம் பண்ணும் பேறு கிடைத்துள்ளது. ரொம்ப சிறப்பாச் சொல்லி, கடைசியாய்ப் பட்டாபிஷேகம் சொல்லப் போறேன். அதையும் எந்தவிதக் குறைவும் இல்லாமல் சொல்லி, அவப்பெயர் ஏதும் இல்லாமல் நல்லபடியாய் முடிக்கப் பெரியவாள் ஆசிர்வாதம் பண்ண வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

அதைக் கேட்டுக் கொண்ட பரமாச்சாரியார், ''அபகீர்த்தி ஒண்ணும் வராது: நல்லபடியா முடியும். ஆனால் ஒண்ணு மட்டும் ஞாபகம் வைச்சுக்கோ! சபையிலே மாலை போட்டுக் கௌரவம் பண்ணுவா; சன்மானம் தருவா; புகழ்ச்சியா நாலு வார்த்தை சொல்லுவா. அந்தச் சமயத்துல, கொஞ்சம் கர்வம் தலைதூக்கும்! அதை மட்டும் எழும்ப விடாமல், அடக்கி வை. க்ஷேமமாய் இருப்பாய்'' என்று ஆசிர்வதித்தார்.

அந்த இரண்டு வரி அறிவுரையில் ஓர் உபன்யாசத்தின் சாராம்சமே அடங்கியிருப்பதை நினைத்துச் சிலிர்த்துப் போனார் அந்த உபன்யாசகர்.

தினமும் அதிகாலை பஞ்சாங்கம் படிப்பது என்று ஒன்று உண்டு. பஞ்சாங்கத்தில் அன்றைய தினத்துக்குள்ளதை ஒருவர் பரமாச்சாரியாருக்குப் படித்துக் காட்டுவார். ஒருமுறை வடக்கே முகாமிட்டிருந்த போது, ஏதோ காரணமாய், பஞ்சாங்கம் படிப்பது



* குருவே சரணம்! ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பின்தொடர......

இரண்டொரு நிமிடம் தாமதமான போது பரமாச்சாரியார், ''கிடுகிடுவென அன்றைக் குரியனவற்றைச் சொல்லி, இன்றைக்கு இதுதானே போட்டிருக்கு?'' என்று கேட்டார்! இதன் மூலம் நேரத்தோடு எதையும் செய்ய வேண்டும் என்பதை உணர்த்தினார். அதோடு அறிவு முதிர்ச்சி காரணமாக சில விஷயங்களுக்கு அப்பாற்பட்டவர்களாகி விட்டாலும் அவரவருக்கு ஏற்பட்ட கர்மாக்களைச் செய்து வர வேண்டும் என்பதையும் எடுத்துக் காட்டினார்.

விஷ்ணுபுரம் என்ற ஊரில் முகாம். பரமாச்சாரியார் ஒரு கொட்டகையில் தங்க



●● விக்ரகம், புஷ்பம் ஏதுமில்லாமல் பரமாச்சாரியார் மானசீக பூஜை செய்வது கண்கொள்ளாக் காட்சி. சுற்றுப்புற நடவடிக்கைகளால் பாதிப்பு எதுவுமின்றி அவர் பூஜை செய்வதைப் பார்ப்பது நமக்கு மெய்சிலிர்க்கும் அனுபவம்.

●● வெகு காலமாகவே பெரியவாளுக்குப் பொரிதான் ஆகாரம். இப்போது அதையும் விட்டாயிற்று. வாழைக்காயில் தயாரித்த மாவு தான்.

●● பரமாச்சாரியார் துயில்வது ஆறுக்கு இரண்டரை அளவிலான பல்லக்கு. இதை மேனா என்பர். கதவை மூடின பின், காற்றுப் போக சிறு வழி உண்டு. அவ்வளவுதான்.

ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இரவு பக்தர்கள் தரிசனம் முடிந்தபின், கூட இருந்த உள்ளூர்ப் பிரமுகர் ஒருவரை அழைத்து, ''நீயும் இவ்விடத்திலேயே படுத்துக் கொள்'' என்றார் பரமாச்சாரியார். ஒரே திகைப்பு அந்தப் பிரமுகருக்கு. பரமாச்சாரியாரே சொல்லி விட்டதால் தட்ட முடியாமல் 'சரி' என்று சொல்லி விட்டுக் கொட்டகையில் படுத்துக் கொண்டார். சிறிது நேரம் கூட அவரைக் கண்ணை மூட விடாதபடி கொசுக் கடி. போதாக்குறைக்கு எறும்பும் உண்ணியும் வேறு தொல்லைப்படுத்தின! ஆனால் பக்கத்திலே பரமாச்சாரியாரோ, எந்தவித சலனமுமின்றி, அமைதியாய்க் கண்மூடி தூங்கிக் கொண்டிருந்தார். கொசுத் தொல்லையும், எறும்புக்கடியும் தாங்க முடியாமல், எழுந்து உட்கார்ந்து கொண்டு, பரமாச்சாரியாரை உற்றுப் பார்த்தார் அந்தப் பிரமுகர். அடுத்த விநாடியே பரமாச்சாரியாரும் கண் விழித்து, அவரை நோக்கி, ''என்ன கொசு கடிக்கிறதா? எறும்பு கடிக்கிறதா? உண்ணி கடிக்கிறதா?'' என்று கனிவுடன் விசாரித்து விட்டுக் கூறினார்: ''சொற சொறப்பான பாறாங்கல்லையும் பட்டு மெத்தையையும் ஒன்றாய்ப் பாவிக்கிற மனசு வேண்டும். நாம் இந்திரியங்களை அடக்கி வைக்கணுமே யொழிய, அவற்றுக்கு நாம் அடிமையாகி விடக் கூடாது!''

இப்படிச் சொன்னதோடு அல்லாமல், ''சரி! நீ உன் அகத்துக்குப் போய்ப் படுத்துத் தூங்கு'' என்று அந்தப் பிரமுகருக்குக் கனிவுடன் உத்தரவு வழங்கி விட்டுத் தாம் மட்டும் அதே இடத்தில் நித்திரையில் ஆழ்ந்தார் பரமாச்சாரியார்!

(பரமாச்சார்யாளின் அணுக்கத் தொண்டர்கள் கூறக் கேட்டுத் தொகுத்தவர் நமது நிருபர்)

மேலட்டை மற்றும் மூன்றாவது அட்டையில் உள்ள வண்ணப்படங்கள்:

**விக்னேஷ் ஃபோட்டோ ஸ்டுடியோ.**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka

## இதோ அறிமுகம்

## முற்றும் புதிய

# ':ப்ரூட் ஸலாட் உணவு'

ஃபாரெக்ஸ் – ஃப்ரூட்ஸ். இது கோதுமை மற்றும் பாலின் ஊட்டச்சத்துக்களுடன் முன்கூட்டிப் பக்குவம் செய்த ஆப்பிள், மாம்பழம் மற்றும் வாழைப்பழத்தின் சுவையும் கொண்டது.




**:பாரெக்ஸ்-:ப்ரூட்ஸ்**

**சுவையுடன் வளரும் வழி.**

500 கிராம் பேக்!
ரெகுலர் பேக்கைவிட 100 கிராம் அதிகம்!

இப்போது தேர்ந்தெடுத்த இடங்களில் மட்டுமே கிடைக்கிறது

Gx.247.90 Tml